# திருக்கோயில்கள் வழிகாட்டி

## திருப்பூர் மாவட்டம்





தமிழ்நாடு அரசு

இந்து சமய அறநிலையத்துறை வெளியீடு

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | ஜுன் 2014 |
| முன் அட்டை | : | அருள்மிகு சுப்பிரமணியசுவாமி<br>சிவன்மலை |
| பின் அட்டை | : | திருமூர்த்திமலை, உடுமலைபேட்டை |
| அச்சிடுவோர் | : | கார்த்திகேயன் ஆப்செட் பிரிண்டர்ஸ்<br>அவிநாசி. செல் : 99447 70675 |
| விலை | : | ரூ. 80.00 |
| உரிமை | : | இந்து சமய அறநிலையத்துறை<br>தமிழ்நாடு அரசு |

**பூ. செந்தூர் பாண்டியன்**
இந்து சமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009
நாள்: 23.5.2014

## வாழ்த்துச் செய்தி

ஒலியின் ஓசையாய், ஓங்காரத் திருவடியாய் எல்லோரும் போற்றும் வெற்றித் திருமகளாய், தமிழர்களின் குலவிளக்காய் மாண்புமிகு இதய தெய்வம் அம்மா அவர்களின் நல்லாசியோடு இந்த வாழ்த்துச் செய்தியை வழங்குகிறேன்.

இலட்சிய வேட்கையுடன், உலகமேவியந்து போற்றும் உன்னத திட்டங்களால், தொலைநோக்குப் பார்வையால் தமிழகத்தை முதன்மை மாநிலமாக எல்லாத் துறைகளிலும் வழிநடத்தும் அம்மா அவர்களின் மணிமகுடச் செயல்களில் ஒன்றாக இத்திருக்கோயில்கள் வழிகாட்டி புத்தகம் அமைகிறது.

பிறவி எடுத்ததன் பலனை ஒவ்வொரு மனிதனும் அடைய வேண்டும் என்றால் ஆன்மாவைப் பற்றி அறிய வேண்டும். ஆன்மாவைப் பற்றி அறிய ஒரே வழி திருக்கோயில்களுக்கு சென்று வழிபடுவதே. மனித மனம் உயரவும், சமூக வாழ்க்கை சிறக்கவும் அனைவருக்கும் வழிகாட்டியாகத் திகழ்வது திருக்கோயில்களே.

தமிழகத்தின் பெருமையே திருக்கோயில்களை சார்ந்துதான் அமைகிறது. தமிழகத்தில் திருப்பூர் மாவட்ட திருக்கோயில் வழிகாட்டி புத்தகம் பக்தர்களுக்கும், பக்திச் சுற்றுலாப் பயணிகளுக்கும் கருத்துப் பெட்டகமாகவும், கருவூலமாகவும் திகழும் என்பதில் ஐயம் இல்லை.

இவ்வழிகாட்டி புத்தகம் எல்லா வகையிலும் மின்னி மிளர்கிறது. இதனை நேர்த்தியோடு உருவாக்கிய அனைத்து நெஞ்சங்களுக்கும் வாங்கிப் பயன்பெறும் உள்ளங்களுக்கும் என் அன்பையும், நெஞ்சம் நிறைந்த வாழ்த்துக்களையும் நெகிழ்வோடு பதிவு செய்கிறேன்.

அன்புடன்

P. [signature]

(பூ.செந்தூர் பாண்டியன்)

**முனைவர் ரா.கண்ணன்,** இ.ஆ.ப.,
அரசு கூடுதல் தலைமைச் செயலாளர்




சுற்றுலா, பண்பாடு மற்றும்
அறநிலையங்கள் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை – 9.
தொலைபேசி: 044 ‡ 25670820

## வாழ்த்துரை

தமிழ்நாட்டிலுள்ள திருக்கோயில்களைப் பற்றிய வரலாறுகளை மாவட்ட வரிசையாக எழுதி வெளியிடுவது காலத்தின் தேவையாகவுள்ளது. இதை ஆன்மீக அன்பர்கள் பெரிதும் எதிர்நோக்கியுள்ளனர். தமிழக நாகரிகம் திருக்கோயில் நாகரிகமே.

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்
திருக்கோயிலில்லாத திருவிலூர்"
...."ஊரல்ல அடவி காடே"

என்னும் கருத்தாழம் தமிழக மக்களிடையே அழுந்தி உள்ளது. வாழ்க்கைச் சூழல் மற்றும் கால வளர்ச்சியில் பல்வேறு சிக்கல்களை எதிர்கொள்ளத் துணியும்போதும் ஏற்படும் மனச்சலனங்கள் ஆன்மீகத் தேடல்களை அதிகரித்துள்ளன. பாடல் பெற்ற தலங்கள், பரிகாரத் தலங்கள், மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருக்கோயில்கள், இராசித்தலங்கள் என மக்கள் தங்களின் தேவைகளுக்கேற்ற திருத்தலங்களை நோக்கி பயணிக்கத் தொடங்கியுள்ளனர்.

ஒரு கோயிலைப் பார்க்கும்போது அதில் உள்ள கல் சிற்பங்கள், மரச்சிற்பங்கள் மற்றும் பண்டை ஓவியங்கள் அக்கோயிலின் தல வரலாற்றை எடுத்துரைக்க அங்கே எவரும் இலர். பல கோயில்களில் இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடல் புராணம் போன்ற காப்பியங்களில் புராண வரலாற்றுக் காலத்தில் இறைவன் நடத்திய திருவிளையாடல்கள் காட்சிப்படுத்துவதன் மூலம் எடுத்துரைக்கப்படுகின்றன.

உதாரணமாகத் திருப்புடைமருதூர் இராஜகோபுர ஓவியங்கள், திருக்குற்றாலச் சித்ர சபை ஓவியங்கள் போன்றவை. ஆதலால், அதிகாரப்பூர்வமாக வெளியிடப்படும் இவ்வழிகாட்டி நூல் செல்லும் கோயில்களைப் பற்றி அறிவதற்கு இன்றியமையாததாக இருக்கிறது. மேலும் வெளிநாட்டு, உள்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள், குறிப்பாக இந்து மதத்தின் மீதும் இந்தியாவின் பண்டைய

கலாச்சாரத்தை அறியவும். தங்கள் பயணத் திட்டங்களை வகுக்கவும் இவ்வழிகாட்டி நூல் நல்ல உறுதுணையாக அமையும். மாவட்டந்தோறும் இவ்வழிகாட்டி நூல்கள் இந்து சமய அறநிலையத்துறையினரால் வெளியிடப்பட்டமைக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள். எல்லா மாவட்டங்களையும் அடக்கிய மாநில அளவிலான ஒரு வழிகாட்டி நூலையும் மாவட்ட நூல்களைச் சுருக்கி வெளியிட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு வாழ்த்துகிறேன்.

“ஆலயம் தொழுவது சாலவும் நன்று” என்பது அவ்வைப் பிராட்டியாரின் நல்லுரையாகும். அறம்காத்த பண்டைத் தமிழ் மன்னர்கள் அறச்சின்னங்களாக ஆலயங்களை எழுப்பி, தத்தம் இயல்பிற்கேற்றவாறு பொன்னும் பொருளும் வழங்கி அவைகளைப் பண்புக் களஞ்சியங்களாக உருவாக்கி வைத்துள்ளனர். அண்டை நாட்டார் வந்து வியந்து போற்றும் கவின்கலைச் சிற்பங்களையும், ஓவியக் கலைகளையும் ஒவ்வொருவரும் கண்டு பேருவகை கொள்ள வேண்டிய ஒன்றாகும். திருக்கோயிலின் தொன்மைகருதி மாவட்டந்தோறும் உள்ள திருக்கோயில்களுக்குச் சென்று கண்ணாரக் கண்டு, நெஞ்சுருக நின்று, நினைத்ததை வழிபட ஏதுவாக மாவட்டக் கையேடு தலவரலாற்றோடு வெளியிடுவது பக்தர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியாகும். இக்கையேடு வெளியிடுவதற்குத் தலவரலாறு முதல் அப்பகுதி திருக்கோயில் களின் தனிச்சிறப்புகள் வரை கொடுத்துதவி, மாவட்டந்தோறும் இந்நூல் வெளியிட உறுதுணை புரிந்த அத்துணை அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள்.

ரா கண்ணன்
28/05/2014

(முனைவர் ரா.கண்ணன்)

**ப.தனபால்,** எம்.ஏ., பி.எல்.,
ஆணையர்
இந்துசமய அறநிலையத்துறை




119, உத்தமர் காந்தி சாலை,
நுங்கம் பாக்கம்
சென்னை – 600034
அலுவலகம் : 044-2833 4815
நிகரி : 044-2833 4816
மின்னஞ்சல் : tn.endowments@gmail.com

## வாழ்த்துரை

"கால்களால் பயன்என் கறைக்கண்டேன் உறை கோயில்
கோபுரக் கோகரணம் சூழாக் கால்களால் பயன்என்"

என்னும் நாவுக்கரசரின் நன்மொழிக்கேற்ப ஆயிரம் நாமம் உரைப்பினும் அணுப்பொழுதாவது அவன் அருளாலே அவன் தலம் நின்று அவன் தாள் வணங்கி மகிழ்வதற்கு ஈடில்லை என்பார்கள். இப்பேரின்பத்தை எந்நாளும் அனுபூதியடையக் கிடைத்த வாய்ப்பு வாழ்நாளில் கிடைத்த பிறவிப் பயனாகும்.

சமயத்தின் மூலம் உயர் பண்பினையும் ஒழுக்கத்தையும், நம்பிக்கையையும், இடர்பாடுகளைச் சமாளிக்கும் மனப்பான்மை யையும் ஏற்படுத்துதல் முடியும். உண்மை, தூய்மை, அன்பு, நேர்மை, அயராத நம்பிக்கை போன்ற உயர் பண்புகளை மக்களிடையே ஏற்படுத்தி மனித ஆளுமைவளர்ச்சிக்கு பெரிதும் உதவுவது திருக்கோயில்கள் சார்ந்த பண்பாட்டு அசைவுகளே ஆகும். அதனால்தான் அரசன் முதல் சாமானியன் வரை அவரவர் அரண்மனைகளையும் இல்லங்களையும் காப்பதைவிட ஆலயங்களை காத்து வந்தனர். அந்த வகையில் தமிழகத்தின் ஒவ்வொரு தலமும் ஒரு சிறப்புப் பெற்றவை. தலங்கள் தோறும் தரிசிப்பதால் முன்னோர்கள் தடம் பதித்த மண்ணில் நாமும் சென்று நிற்கும் புண்ணியம் அடைந்தவர்களாகிறோம்.

நல்லறம் செய்து நற்கதி எய்திட சென்றிடுவீர் சிறப்புப் பெற்ற திருக்கோயில்களுக்கு. பக்தி நெறியினிற் சென்று பரகதி வேட்கையராகிப் பாவம் நீங்கிச் சித்திபெற முயல்வோர்க்கு இந்நூல் பெரிதும் ஆற்றுப்படுத்தும்.

இவ்வழிகாட்டி நூல் வெளிவர உதவிய நல்உள்ளங்களுக்கு வாழ்த்துக்களைத் தெரிவித்து அனைவரும் இறைவன் திருவருளால் எல்லா வளமும் பெற்று பல்லாண்டு வாழ வாழ்த்துகிறேன்.

நன்றி!

(ப.தனபால்)

பொருளடக்கம்

## திருப்பூர் மாவட்டம்

25. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் - சிவன்மலை
26. அருள்மிகு மத்தியபுரீசுவரர் திருக்கோயில் - பரஞ்சேர்வழி
27. அருள்மிகு வீரநாராயணப்பெருமாள் திருக்கோயில் - பரஞ்சேர்வழி
28. அருள்மிகு கரியகாளியம்மன் திருக்கோயில் - பரஞ்சேர்வழி
29. அருள்மிகு பிரசன்னவெங்கடேசப்பெருமாள் திருக்கோயில் - காங்கேயம்
30. அருள்மிகு காசிவிசுவநாதர் திருக்கோயில் - காங்கேயம்
31. அருள்மிகு முத்துக்குமாரசுவாமி திருக்கோயில் - வட்டமலை
32. அருள்மிகு உத்தண்ட வேலாயுதசுவாமி திருக்கோயில் - ஊதியூர்
33. அருள்மிகு ஆருத்ரகபாலீசுவரர் திருக்கோயில் - மடவிளாகம்
34. அருள்மிகு சோழீசுவரர் திருக்கோயில் - முத்தூர்
35. அருள்மிகு வீரக்குமாரசுவாமி திருக்கோயில் - வெள்ளகோவில்
36. அருள்மிகு விக்கிரமசோழீசுவரர் திருக்கோயில் - கண்ணாபுரம்
37. அருள்மிகு வஞ்சியம்மன் திருக்கோயில் - மூலனூர்
38. அருள்மிகு காடு அனுமந்தராயசுவாமி திருக்கோயில் - தாராபுரம்
39. அருள்மிகு ஆல்கொண்டமால் திருக்கோயில் - சோமவாரப்பட்டி
40. அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில் - உடுமலைப்பேட்டை
41. அருள்மிகு பிரசன்னவிநாயகர் திருக்கோயில் - உடுமலைப்பேட்டை
42. அருள்மிகு அமணலிங்கேசுவரர் திருக்கோயில் - திருமூர்த்திமலை
43. அருள்மிகு தாண்டவேசுவரசுவாமி திருக்கோயில் - கொழுமம்
44. அருள்மிகு கல்யாணவரதராஜப்பெருமாள் திருக்கோயில் - கொழுமம்
45. அருள்மிகு காசிவிசுவநாதசுவாமி திருக்கோயில் - கொமரலிங்கம்
46. அருள்மிகு சொக்கநாதர் திருக்கோயில் - கணியூர்
47. அருள்மிகு அர்ச்சுனேசுவரர் திருக்கோயில் - கடத்தூர்
48. அருள்மிகு கொங்குவிடங்கேசுவரர் திருக்கோயில் - கடத்தூர்
49. அருள்மிகு குலசேகரமுடையார் திருக்கோயில் - சோழமாதேவி
50. அருள்மிகு திருமாங்கீசுவரர் திருக்கோயில் - கண்ணாடிபுத்தூர்
51. அருள்மிகு அழகுநாச்சியம்மன் திருக்கோயில் - காரத்தொழுவு- கணியூர்



## அருள்மிகு
## அவிநாசிலிங்கேசுவரர் திருக்கோயில்
### அவிநாசி.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு அவிநாசிலிங்கேஸ்வரர் |
| இறைவி | அருள்மிகு கருணாம்பிகையம்மன் |
| தீர்த்தம் | கங்கை, நாககன்னி, ஐராவதம், அம்மன், |
| | சந்திரபுஷ்கரணி, சூரிய புஷ்கரணி |
| தல விருட்சம் | பாதிரி மரம் |
| ஆகமம் | காரணாகமம் |

கோயமுத்தூர் நகருக்கு வடகிழக்கே, கோவை – சேலம் – சென்னை நெடுஞ்சாலையில் 41 கி.மீ. தொலைவில் உள்ள தேவாரப்பதிகம் பெற்ற திருத்தலம் – திருப்புக் கொளியூர் என்று அழைக்கப்பட்ட தலம் – சிறுவன் முதலை வாயினுள் புகுந்த ஊர் – புக்கொளியூர் – அவிநாசி – என்றும் அழிவு இல்லாதது.

கிழக்கு நோக்கிய 100 அடி உயர 7 நிலை இராஜகோபுரமும் இரண்டு பிரகாரங்களும் கொண்ட திருக்கோயில். அன்னை கருணைநாயகி சந்நிதி எதிரேயும், 5 நிலை இராஜகோபுரம் எழுப்பப்பட்டுள்ளது.

தேவாரத் திருப்பதிகம் பெற்ற கொங்கு நாட்டுத் திருத்தலங்களில் இதுவே முதன்மையானது. சுந்தரர் அருளிய திருப்பதிகம் பெற்றது. அவிநாசி கண்டாய் அண்டந்தான் கண்டாய் என அப்பர் பெருமானும் இத்தலம் குறித்துப் போற்றிப் பாடியுள்ளார். அருணகிரிநாதர் திருப்புகழ் பாடியுள்ள திருத்தலம், தலவரலாறு 1021 பாடல்களைக் கொண்டுள்ளது. இயற்றியவர் இளையான் கவிராயர்.

முல்லையும், குறிஞ்சியும் விரவிக் கிடக்கும் கொங்கு நாட்டில் சிவத்தலங்களில் புகழ்மிக்கது அவிநாசித் திருத்தலம். "காசியில் வாசி"என்ற பெருமையோடு, அன்னை பெருங்கருணை நாயகியார் அவிநாசிலிங்கேசுவரரின் வலப்புறத்திலிருந்து அருள் பாலிக்கும் திருத்தலம் "முதலையுண்ட மதலை மீண்ட திருத்தலம்" என்னும் தனிச்சிறப்பைப் பெற்றது.

கொங்கு நாட்டை ஆண்ட மன்னன் கரிகாலன், இப்பகுதியை ஆண்டு வந்த ஆவணன் என்ற இருளனை வென்று, வனப்பகுதியை சீர்படுத்தி நாடாக்கினான். அப்போது அந்த வனத்திலுள்ளே அழகிய "சிவலிங்கத் திருமேனி" தென்பட, அதனைச்சுற்றிக் கோயிலும் கட்டி, குளமும் வெட்டினான் கரிகாலன் என்று சோழன் பூர்வப் பட்டயம் என்னும் நூல் கூறுகிறது.

முதலையுண்ட மதலை மீண்டது

இத்திருத்தலத்தில் நிகழ்ந்த அற்புதங்கள், இத்தலத்தின் சிறப்பை உலகுக்கு உணர்த்திக் கொண்டிருக்கின்றன. அதுவே "முதலையுண்ட மதலை மீண்டு வந்த வரலாறு". திருப்புக்கொளியூரில் வாழ்ந்து வந்தவர் கங்காதரன் என்னும் அந்தணர். அவிநாசியப்பரின் திருவருளால், அவரது துணைவி ஒரு மகனைப் பெற்றெடுத்தாள். அம்மகவுக்கு அவிநாசிலிங்கம் என்று பெயரும் சூட்டினார்.

ஐந்து வயதாகிய நிலையில், அண்டை வீட்டுச்

சிறுவர்களுடன் அவிநாசியப்பர் திருக்கோயிலின் அருகில் உள்ள தாமரைக் குளத்தில் அவிநாசிலிங்கம் நீராடச் சென்றான். அப்போது குளத்திலிருந்து முதலையொன்று, அச்சிறுவனைப் பிடித்து விழுங்கி விட்டது. உடன் நீராடிய சிறுவர்கள், கங்காதரனிடம் இது பற்றிக் கூறினர். குழந்தையை இழந்து வருந்தினர் கங்காதரன் தம்பதியர்.

அவிநாசிலிங்கத்தின் நண்பனுக்கு 7 வயதான நிலையில் அவனுக்கு பூணூல் அணிவிக்கும் வைபவத்தை அவனது பெற்றோர் சிறப்பாகக் கொண்டாடிக் கொண்டிருந்தனர். இந்த நிகழ்ச்சியைக் கண்ட அவிநாசிலிங்கத்தின் தாயார், தனது மகன் முதலை விழுங்கி மாண்டதையும், இப்போது உயிருடன் இருந்திருப்பின், அவனுக்கும் இந்தப் புனிதச் சடங்கினைச் செய்திருப்போமே என்று எண்ணிப் புலம்பி அழுதார்.

கேரளத்தில் சேரமான் பெருமானைச் சந்திக்கச் செல்லும் வழியில், இவ்வழியே வந்த சுந்தரமூர்த்தி நாயனார், ஒரே வீதியில் ஒரு வீட்டில் மங்கல ஒலியும், எதிர் வீட்டில் அழுகுரலும் ஒலிப்பது கேட்டு விசாரித்தார். அப்போது அண்டை வீட்டார், அவிநாசிலிங்கம் என்னும் சிறுவனை, முதலை விழுங்கிய கதையைக் கூறினர்.

சுந்தரர் பாதம் பணிந்த கங்காதரன் தம்பதியரைக் கண்ட சுந்தரரின் மனம் இளகியது. முதலை விழுங்கிய அவரது குமாரனை மீட்டுத் தந்த பின்னரே அவிநாசியப்பர் திருவடிகளைப் பணிவேன் என்று கூறிவிட்டுத் தாமரைக் குளம் நோக்கிச் சென்றார். அதுவோ வேனிற்காலம், தாமரைக் குளத்தில் தண்ணீர் முழுவதும் வற்றியிருந்தது. சுந்தரைப் பின்தொடர்ந்து ஊராரும் குளத்தருகே வந்தனர்.

சுந்தரர் அகத் தாமரையில் அமர்ந்திருந்த ஈசனைத் துதித்து நான்கு பதிகங்கள் பாடினார். முதல் பதிகத்தைப் பாடி முடித்ததுமே, மனம் குளிர்ந்த அவிநாசியப்பர் திருவருளால் கருமேகங்கள் சூழ்ந்து, மழை பொழிந்து, குளம் நிரம்பியது.

தாமரை மலர்கள் மலர்ந்தன. கரையை நெருங்கி வந்தது முதலை. அதே முதலை 2 ஆண்டுகளுக்கு முன் சிறுவனை விழுங்கிய முதலையே தான், 4 பதிகங்கள் பாடி முடிக்கும் போதே தான் விழுங்கிய குழந்தையை இரண்டாண்டு வளர்ச்சியோடு, கரையில் கக்கிவிட்டு மறைந்தது. கூடிநின்ற மக்கள் அதிசயித்தனர். சுந்தரர் பாதம் பணிந்தனர்.

சோழநாட்டில், “ஹரதத்தர்” சிவமேசிறந்தது என போற்றிப் பாடிய வைணவர். அவர் இந்த நிகழ்ச்சியைப் போற்றிப் பாடியுள்ளார்.

இத்தலத்தில் மேலும் நாககன்னிகை, தாடகை, ரம்பை ஆகியோர் வழிபட்டு பேறு பெற்றனர். எக்ஞுதத்தன் என்ற வணிகனும், ஒரு காகமும் முக்தி பெற்றதும் தலவரலாற்றில் இடம் பெற்றுள்ள நிகழ்ச்சிகள் ஆகும்.

திருக்கோயிலின் உள்சுற்றில் “காசித்தீர்த்தம்” உள்ளது. கங்கையே இங்கு வருவதாக ஐதீகம். இது தவிர விசதீர்த்தம், சந்திர புஷ்கரணி, கயிலை தீர்த்தம், பிரம்மதீர்த்தம் என்ற பெயர்களைக் கொண்ட திருக்குளம், தாமரைக்குளம், ஐராவத தீர்த்தம் ஆகியவை புனிதமாகக் கருதப்படுகின்றன. தலமரம் – பாதிரி மரம், பெருவிழா நடைபெறும் காலத்தில் மட்டும் பூக்கும் தன்மையுடையது.

அவிநாசியப்பர் தானே முளைத்த திருமேனியாக அருள் பாலிக்கிறார். அவருக்கு வலப்புறம் கருணாம்பிகை சந்நிதியும், இவர்களிடையே சோமஸ்கந்தராக முருகப்பெருமான் சந்நிதியும் உள்ளன.





இத்திருக்கோயிலில் கண்டறியப்பட்ட 32 கல்வெட்டுக்கள், சோழர்களும், பாண்டியர்களும், சிற்றரசர்களும், பலநிலைகளில் இத்திருக்கோயிலுக்கு செய்துள்ள திருப்பணிகளை விவரிக்கின்றன .

"உரைப்பார் உரைஉகந் துள்கவல் லார்தங்கள் உச்சியாய்
அரைக்கா டரவா ஆதியும் அந்தமும் ஆயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளியூர் அவிநாசியே
கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே"

என்று சுந்தரர் பாடிய திருப்பதிகம்,காலனையே, முதலையிடம் பிள்ளையை மீட்டுத்தரக் கட்டளையிடுமாறு ஈசனை வேண்டியதைக் கூறுகிறது.

## தேர்த்திருவிழா

சித்திரைத் தேர்திருவிழா மிகப்பெரிய திருவிழா ஆகும். முதல் நாள் கொடியேற்றமும், ஐந்தாம் நாள் பஞ்சமூர்த்திகள் 63 நாயன்மார்களுக்கு காட்சியளித்தலும், 7ஆம் நாள் பூர நட்சத்திரத்தில் பஞ்சமூர்த்திகளும், பெருமாளும் திருத்தேருக்கு எழுந்தருளள், 8ஆம் நாள் பகலில் திருத்தேர் வடம்பிடித்தலும், 9ம் நாள் அம்மன் திருத்தேர் வடம்பிடித்தலும், 11ஆம் நாள் நடராசர் தரிசனமும், 12ஆம் நாள் மஞ்சள் நீர் உற்சவமும் மிக சிறப்பாக நடைபெறும். பங்குனி உத்திரத்தில் 3 நாட்கள் "முதலை வாய்ப்பிள்ளை" உற்சவம் நடைபெறுகிறது.

## அன்னதானம்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப் பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் தினமும் 100 பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

நாள்தோறும் ஐந்து கால வழிபாடு நடைபெறுகிறது.



**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 5.00 - 1.00 மணி,

மாலை 4.00 - 8.00 மணி

தொலைபேசி : 04296 - 273113

மின்னஞ்சல் : avinashilingeswarar@sancharnet.in

இணையதளம் : www.avinashilingeswarartemple.org.



## அருள்மிகு
## ஆகாசராயர் திருக்கோயில்
### வேலாயுதம்பாளையம், அவிநாசி வட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு ஆகாசராயர் |
| தல விருட்சம் | தொரட்டி மரம் |
| ஆகமம் | காமீக ஆகமம் |

அவிநாசியிலிருந்து மங்கலம் செல்லும் பாதையில் 1 கி.மீ. தொலைவில் உள்ளது வேலாயுதம்பாளையம். பாதிரி மரத்தடியில் தவமிருந்த அன்னைக்கு காவல் இருந்தவரே ஆகாசராயர்.

தான் தவமிருக்கும் போது எந்தவித இடையூறும் தன்னை அணுகாவண்ணம் காத்திட ஆகாயத்திலும், மண்ணிலும் பலம் பொருந்திய சக்தி வாய்ந்த பாலகன் ஒருவனைப் படைத்தாள் அன்னை. அவரே ஆகாசராயர். தவம் முடிந்த பின்னும், அங்கேயே தங்கி மக்களுக்கு அருள்பாலிக்குமாறு ஆணையிட்டாள்.

நாள்தோறும் இரண்டுகால வழிபாடு நடைபெறுகிறது. சித்திரைப் பொங்கல் 10 நாட்கள் நடைபெறும் மிகப்பெரிய திருவிழா ஆகும்.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி முதல்

இரவு 8.00 மணி வரை





## அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்

### கருவலூர்

| | |
|---|---|
| இறைவி | அருள்மிகு மாரியம்மன் |
| ஆகமம் | காரணாகமம் |

அவிநாசிக்கு மேற்கில், அன்னூர் செல்லும் சாலையில் 10 கி.மீ தொலைவில் உள்ளது கருவலூர். கொங்கு நாட்டில் பண்ணாரிக்கு அடுத்தபடியாக புகழ்பெற்ற திருக்கோயில். மாரியம்மன் நின்ற கோலத்தில் காட்சி தரும் ஒரே கோயில் இது.

பண்ணாரிக்குண்டம் முடிந்த மூன்றாம் நாள் பங்குனி மாதத்தில் இக்கோயில் திருத்தேர்விழா நடைபெறுகிறது. 5 நிலை இராஜகோபுரத்துடன், நடுநாயகமாக விளங்குகிறது திருக்கோயில்.

அவிநாசித் தலத்தில் சுந்தரர், முதலை விழுங்கிய பாலகனை உயிர்ப்பிக்க, தாமரைக் குளத்திற்குச் சென்றபோது, அது வறண்டு இருந்தது. அவர் ஈசனை நோக்கிப் பதிகம் பாடத் துவங்கியதுமே, இவ்வூரில் கருமேகம் தோன்றி, மின்னல் மின்னி பெருமழை பொழிந்தது. அதுவே ஆறாகப் பெருகி, அவிநாசி தாமரைக்குளமும் நிரம்பியது. முதலையும் தான் விழுங்கியபாலனை உமிழ்ந்து உயிர்ப்பித்தது.

மேகங்கள் கருவிலிருந்து மழை பொழிந்ததால், கருவலூர் என்ற பெயர் உண்டானதாக, வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. நள்ளாற்றின் கரையில் உள்ள கங்காதீசுவரரை

வழிபட்ட காமதேனு, கருவை ஈன்று கன்றினைத் தந்ததால், "கருவலூர்" எனப்பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

கருவறையின் முன்பு இருபுறமும் நீலன், நீலி சிலைகள் உள்ளன. முன் மண்டபம் 30 தூண்களைக் கொண்டது. பக்தர்கள் அமர்ந்திருந்து அம்மனைத் துதித்திட வசதியானது. திருச்சுற்றில் கன்னிமார்சாமி, மேற்கு நோக்கி அமர்ந்துள்ளார். கருவறையின் கிழக்கே, எசகடக்குதிரைச் சிற்பங்கள் உள்ளன.

கருவறை விமானம் மூன்று நிலைகளைக் கொண்டது. 30 அடி உயரம் மாரியம்மன் சூலம், கபாலம், உடுக்கை, பாசம் ஆகியவற்றை ஏந்தியபடி நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார்.

வெப்புநோய் தீர்ப்பவளாய், தீராத கண்நோய்களைத் தீர்ப்பவளாக கருணையுள்ளம் கொண்டவளாக கருவலூர் மாரியம்மன் தனிச்சிறப்புடன் விளங்குகிறாள். தேரோட்டம் நடைபெறுவதற்கு 15 நாட்கள் முன்பு காப்பு கட்டப்பட்டு கம்பம் நடப்படும். கம்பம் சாட்டிய நாள் முதல் தேரோட்டம் வரையில் அம்மன் பட்டினியிருப்பதாக ஐதீகம். அப்போது அம்மனுக்கு நைவேத்யம் கிடையாது. இரவில் மட்டும் பச்சை அரிசிமாவு படைக்கப்படுகிறது.



திருவிழாவில், முதல் நாள் சிம்மவாகனத்திலும், இரண்டாம் நாள் பூத வாகனத்திலும், மூன்றாம் நாள் காளைவாகனத்திலும், நான்காம் நாள் மலர் பல்லக்கிலும் பவனி வருவாள் அம்மன். அன்று திருக்கல்யாணமும் யானை வாகனத்தில் திருவுலாவும் நடைபெறும். ஐந்தாம் நாள்

தேரோட்டம் துவங்கி 7ம் நாள் நிலையை அடைகிறது. அதனைத் தொடர்ந்து குதிரை வாகனத்தில் பரிவேட்டையும், காமதேனு வாகனத்தில் உலா வருதலும், தெப்ப உற்சவமும் நடைபெறும். கருவலூரில் மாரியம்மன் கோயிலைத் தவிர கங்காதீசுவரர், கல்யாணவெங்கடரமணசுவாமி, மற்றும் வேணுகோபால சுவாமி திருக்கோயில்கள் உள்ளன. ஆடி வெள்ளிக்கிழமைகளில் ஊஞ்சல் உற்சவம் சிறப்பாக நடைபெறும்.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

அன்னதானம்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 04296 – 288254





## அருள்மிகு
## வெங்கடேசப்பெருமாள் திருக்கோயில்
### மொண்டிபாளையம்

| | |
|---|---|
| இறைவன் | ஸ்ரீ வெங்கடேசப்பெருமள் (சுயம்பு மூர்த்தி) |
| தீர்த்தம் | கெற்பவாவி |
| தல விருட்சம் | ஊஞ்சமரம் |
| ஆகமம் | பாஞ்சராத்ரம் |

திருப்பூருக்கு வடமேற்கில், சேவூர் – தண்டுக்காரன்பாளையம் வழியே சென்று இத்தலத்தை அடையலாம். கோவை அன்னூர் சாலையில் பசூர் என்னும் ஊரிலிருந்து கிழக்கே 5 கி.மீ. சென்றும் அடையலாம். (கோவையிலிருந்து 42 கி.மீ. அன்னூரிலிருந்து 12 கி.மீ.) அவிநாசி, அன்னூரிலிருந்து பேருந்து வசதிகள் உள்ளன.

'ஊஞ்சல் வனம்' என்ற சிறப்பைப் பெற்ற திருத்தலத்தில், தானே தோன்றி முளைத்தவராக, வெங்கடேசப் பெருமாள் அருள்பாலிக்கிறார். 'மேலத்திருப்பதி' என்றும் அழைக்கப்பட்டு, சிறப்பிக்கப்படும் இத்தலம், திருமலை – திருப்பதிக்கு இணையாகக் கருதப்படுகிறது.

'பவானிக்கு நேர் தெற்கில் 20 கி.மீ. தொலைவில் தோன்றப் போகிறேன்!' என்று திருப்பதியில் ஆவேசம் கொண்ட பக்தர் ஒருவர் வாயிலாகக் கூறிய பெருமாள் மொண்டிபாளையத்தில் எழுந்தருளினார் என்று செவிவழிச் செய்திகள் கூறுகின்றன.



மூலவர் சுயம்பு வடிவமானவர், மலராத தாமரை மொட்டு நிலையில் (லிங்க வடிவில்) உள்ளார். பெருமாள் திருவுருவம் தங்கமுலாம் பூசப்பட்ட பித்தளைத்தகட்டில் புடைப்பு சிற்பமாக உள்ளது.

ஆலத்தூரில் பிறந்த கொண்டநாயக்கர், பசுக்களை மேய்த்து வந்தபோது, ஆலத்தூருக்கும் மொண்டிபாளையத் திற்கும் இடையே, ஒரு பாறைக்கடியில் சாலிக்கிராமமும், ஒரு சங்கும், தாமிரக் கிண்ணமும் கிடைத்தன. அவற்றையே இஷ்ட தெய்வமாகக் கருதி வழிபடத் துவங்கினார். அவரது வழித்தோன்றல்களால் விரிவுபடுத்தப்பட்டு 1750க்குப் பிறகு பெரும் வளர்ச்சியடைந்தது திருக்கோயில்.

மூன்று பிரகாரங்களுடனும் கூடிய திருக்கோயில் மூலவர் வெங்கடேசப்பெருமாள், தாயார் அலர்மேர் மங்கை, மற்றும் திருச்சுற்றில் வேணுகோபாலன், ஆண்டாள், மகாலட்சுமி, விநாயகர், ஆஞ்சநேயர் முதலிய சந்நிதிகள் அமைந்து உள்ளன. திருக்கோயிலுக்கு மேற்கில் திருக்குளம் உள்ளது.

கூட்டு மருந்து

வெள்ளெருக்கம் மொட்டு, வேப்பங்கொழுந்து, திருத்துளசி, எலுமிச்சை, மாங்கொழுந்து, அரளிப்பூ, ஊஞ்சல் சரி, சுவாமி மெழுகு ஆகியவற்றைக் கொண்டு, ஒன்றாகக்

கலந்து தீ மூட்டி வெளிவரும் நறுமணப்புகையும், எரிந்த பின்பு கிடைக்கும் கரிப்பொருளை சாந்துப் பொட்டாகத் தயாரித்து, பக்தர்களுக்கு வழங்குகிறார்கள்.

தீராத சருமநோய்க்கு மருந்தாகிறது இந்தக் கூட்டு மருந்து. மனநோய் கொண்டவர்கள், இங்கு 48 நாட்கள், 24 நாட்கள் தங்கியிருந்து விரதம் மேற்கொள்கின்றனர். பாஞ்சராத்ர ஆகமமுறைப்படி, மூன்று கால வழிபாடுகள் நடைபெறுகின்றன. தை மாதத்தில் 10 நாட்கள் பெருவிழா நடைபெறும். கொடி ஏறிய 3ம் நாள், தெப்ப உற்சவமும், 8ம் நாள் தேர்த்திருவிழாவும் நடைபெறும்.

புரட்டாசி சனிக்கிழமைகள், உறியபடி உற்சவம் ஆகியவை முக்கியமான சிறப்பு வழிபாடு நாட்கள் ஆகும். ‘கருடசேவை’ இக்கோயிலின் தனிச்சிறப்பு ஆகும். மெறவணை என்ற இந்த கருட சேவையை காணிக்கையாகக் கட்டணம் செலுத்தி பக்தர்களும் பிரார்த்தனைகளை நிறைவேற்றலாம். நவக்கிரகத் தலங்களில் ‘புதன்’ பரிகாரத்தலமாக விளங்குகிறது.

வடவேங்கடத்தானின் வண்ணத்தை மொண்டி பாளையத்தில் நிதர்சனமாகக் கண்டுகளித்தவர் எண்ணற்றவர். எனவே தான், இத்தலம் கொங்குநாட்டில் மேலத்திருப்பதி என்று கருதப்படுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 - 12.00 மணி

மாலை 4.00 - 8.00 மணி

**தொலைபேசி :**

04296 - 289270





## அருள்மிகு
## இலட்சுமிநரசிம்மப் பெருமாள் திருக்கோயில்
### தாளக்கரை

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு இலட்சுமிநரசிம்மசுவாமி |
| இறைவி | இலட்சுமி |
| தல விருட்சம் | வில்வம், வேம்பு |
| ஆகமம் | பாஞ்சராத்ரம் |

மொண்டிபாளையம் அருகிலேயே அன்னூர் – புளியம்பட்டி சாலையில் சற்றே திரும்பினால், தண்டுக்காரன் பாளையம் என்னும் சிற்றூர் உள்ளது. அங்கிருந்து விலகி உள்ளே 2 கி.மீ. தாளக்கரையை சென்று அடையலாம்.

நரசிம்மர் திருத்தலங்களில், திருமாலை, லட்சிமிநரசிம்மராக, இடதுபுறம் அல்லது வலதுபுறம் தன்னோடு அமர்த்தியபடி தரிசிக்கிறோம். ஆனால் தாளக்கரையில் சற்று வித்தியாசமான திருவுருவை சேவிக்கிறோம்.

தாளக்கரை லட்சுமி நரசிம்மர், சாந்த ஸ்வரூபியாக, அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். திருமகளை மடியில் அமர்த்தியபடி இராமல் இடதுபுறம் தனியாக அமர்த்தியபடி காட்சி தருகிறார். அழகிய அலங்காரங்களுடன், சிரித்த முகத்துடன் சாந்த மூர்த்தியாக காட்சி தருகிறார் நரசிம்மப் பெருமாள்.



**சர்ப்ப விநாயகர்**

தாளக்கரையை சர்ப்பதோஷ பரிகாரத் தலமாகக் கருதலாம். காரணம், அங்குள்ள விநாயகரின் சிரம் மீது அரவம் குடைபிடித்தபடி உள்ளது. அதனால் சர்ப்ப விநாயகர் என்றே அழைக்கப்படுகிறார்.

அதுமட்டுமல்ல, இங்கே தனிசந்நிதி கொண்டுள்ள ருக்மணி, சத்யபாமா சமேத வேணுகோபாலர், வித்தியாசமானவர். அவரது சிரத்தின் மீதும் ஆதிசேஷன் குடைபிடிப்பது போல் நாம் காண்கிறோம். இவை இரண்டுமே, தாளக்கரை சர்ப்பதோஷ நிவர்த்திக்காக ஏற்பட்ட தலம் என்பதை உறுதிப்படுத்துகின்றன. அபயவரத ஆஞ்சநேயர் சந்நிதி ஒன்றும் உள்ளது. பாஞ்சராத்தர ஆகமப்படி வழிபாடுகள் நடைபெறுகின்றன.

நாள்தோறும் மூன்று கால வழிபாடுகள் நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 - 12.00 மணி

மாலை 4.00 - 7.00 மணி





## அருள்மிகு
## கல்யாண
## வெங்கட்ரமணசாமி
## திருக்கோயில்
### சேவூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வெங்கட்ரமண சுவாமி |
| இறைவி | அருள்மிகு ஸ்ரீதேவி பூதேவி |

கொங்கு நாட்டின் தேவார வைப்புத்தலங்களில் ஒன்றாகக் கருதப்படும் 'மாட்டூர்' என்பதே இன்றைய சேவூர் ஆகும். 'சே' என்பது மாட்டைக் குறிக்கும். 'மாட்டூர் அரவா மறவாதிருக்கப் பணிவாயே' என சுந்தரர் ஊர்த் தொகைப் பாடல்களில் குறிப்பிடுவது இத்தலத்தையே என்பவர். 'சேவூரான செம்பியன் கிழானடி நல்லூர்' என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. ஒரு அரசியின் பெயரால் உருவானது இவ்வூர் என்று அறியமுடிகிறது.

கொங்கு நாட்டை ஆண்ட கொங்கு பாண்டியர்களும் அதனை நினைவு கூறும் வகையில் இவ்வூரை அமைத்திருப்பர் என்று அறிஞர்கள் கூறுவர். 90 கல்வெட்டுக்கள் வரலாற்றின் சிறப்பைக் கூறுகின்றன.

வட கொங்கு நாட்டை ஆண்ட பாண்டியர் வம்சத்து அரசன் சுந்தரபாண்டியன், பெயரால் ஒரு திருமால் ஆலயம்

உருவானது. பாண்டிய நாட்டுக் கள்ளழகரை இங்கே எழுந்தருளச் செய்து, இத்தலத்திற்கு 'சுந்தர பாண்டிய விண்ணகரம்' என்றும் 'அழகர் பெருமாள்' என்றும் பெயர் சூட்டினார். 25 கல்வெட்டுக்கள், இந்த வரலாற்றுப் பெருமையை விளக்குகின்றன.

ஒரு கால பூஜை நடைபெற்று வருகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்: காலை 6.00 – 8.00 மணி

## வாலீசுவரர் திருக்கோயில்

சேவூரில் நாம் காண வேண்டிய மற்றொரு திருத்தலம் 'வாலீசுவரர்' திருக்கோயில் ஆகும். கல்வெட்டுக்களில் 'கபாலீசுரம்' என்றழைக்கப்பட்ட இக்கோயில், நாளடைவில் 'வாலீசுவரர் கோயில்' என்றாகிவிட்டது. அன்னை 'தர்மசம்வர்த்தினி' என்று திருநாமம் கொண்டுள்ளாள். வைகாசி விசாகமும், மார்கழியில் ஆதிரைத் திருநாளும் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும் நாட்களாகும்.

நாள்தோறும் ஒரு கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி – இரவு 8.00 மணி





## அருள்மிகு
## மொக்கணீசுவரர் திருக்கோயில்
### கூ.வே. கவுண்டன்புதூர்

திருவாசகத்தில் குறிப்பிடப்படும் தேவார வைப்புத்தலம் இது. கொங்கு நாட்டு சிற்றரசர் ஒருவருக்கு 'கொள்ளுப்பை' வடிவிலேயே காட்சி தந்ததால், இத்தலம் **மொக்கணீசுவரம்** என்றழைக்கப்படுகிறது.

அவிநாசியிலிருந்து அந்தியூர் – கோபி சாலையில் சென்று சேவூரைத் தாண்டி 1 கி.மீட்டரில் "குட்டகம்" என்னும் கைகாட்டி உள்ள இடத்தில் பிரியும் சாலையில் இடப்புறம் சென்று 6வது கி.மீல் கோயிலை அடையலாம். ஆலமரம் உள்ள இடத்தில் திருக்கோயில் உள்ளது. மொக்கணி என்பது கொள்ளுப்பையைக் குறிக்கும்.

கொங்கு நாட்டு சிற்றரசர் ஒருவர் சிறந்த சிவபக்தர். சிவதரிசனம் செய்த பின்னரே உணவு உட்கொள்ளும் வழக்கத்தைக் கொண்டவர். ஒரு சமயம் வேட்டைக்குச் சென்றபோது காட்டில் தங்க நேரிட்டது. குதிரைச்சேவகனை அனுப்பி, அருகில் ஏதாவது சிவாலயம் உள்ளதா என்று கண்டறியுமாறு பணித்தார்.

**எங்கு தேடியும் சிவலிங்கம் ஏதும் தென்படாததால், அரசன் பட்டினி கிடக்கக் கூடாதெனக்கருதி, குதிரைக்குக்**



கொள்ளு வைக்கும் பையில் மண்ணை நிரப்பி சிவலிங்கம் போல அலங்கரித்து அரசனிடம் காட்டினான். அதனையே அரசன் சிவமூர்த்தமாகக் கருதி, தரிசனம் செய்து பின் உணவருந்தினார்.

அதன் பிறகு, குதிரை சேவகன், கொள்ளுப்பையை எடுக்கச் சென்றபோது அது சிவலிங்கமாகவே மாறியிருந்தது கண்டு அதிசயித்தான். விவரமறிந்த அரசன் அங்கேயே ஒரு கோயில் எழுப்பினான்.

"மொக்கணி அருளிய முழுத்தழல் மேனி
சொக்கதாகக் காட்டிய தொன்மையும்...."

என்று மணிவாசகர் புகழ்ந்து பாடிய திருத்தலம், அருணகிரிநாதரின் திருப்புகழ் பெற்ற தலம்.

நாள்தோறும் ஒரு கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:
காலை 7.00 மணி – இரவு 7.00 மணி





## அருள்மிகு
## குன்றபுரீசுவரர் திருக்கோயில்
### குன்னத்தூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு குன்றபுரீஸ்வரர் |
| இறைவி | அருள்மிகு அகிலாண்டேஸ்வரி அம்மன் |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | காமீகம் |

அவிநாசிக்கு வடகிழக்கே, சேவூரிலிருந்து 20 கி.மீ. தொலைவில் உள்ளது குன்னத்தூர். முன்பு “குன்றத்தூர்” என்றழைக்கப்பட்டதே தற்போது குன்னத்தூர் என மருவியுள்ளது.

ஊருக்கு சற்றே ஒதுக்கப்புறமாக அமைந்துள்ளது. குன்றபுரீசுவரர் திருக்கோயில், பெரிய மதிலுடன் கூடியது. இராஜகோபுரம் இல்லை. மேற்கு திசை நோக்கியபடி அமைந்ததால் “பரிகாரத்தலம்” ஆகிறது.

திருக்கோயிலின் முன்னே கருங்கல்லினாலன தீபத்தம்பம் அமைந்துள்ளது. கருவறை கற்றளி குன்றபுரீசுவரர் என்ற திருநாமம் கொண்டு இறைவன் எழுந்தருளியுள்ளார்.

அன்னை உலகநாயகி அகிலாண்டேசுவரி என்ற பெயருடன் தனி சந்நிதி கொண்டுள்ளார். விநாயகர், முருகப்பெருமான், நவகிரகங்கள், பைரவர் கோஷ்ட தேவதைகள், முறையே இடங் கொண்டுள்ளனர். அருகிலேயே லட்சுமிநாராயணப் பெருமாள் ஆலயம் அமைந்துள்ளது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி - பகல் 12.00மணி

மாலை 5.00 மணி - இரவு 8.00 மணி



## விமானங்கள்

விமானம் என்பதற்கு மேலான அளவு என்று பொருள். மானம் என்றால் அளவு. பண்டைய காலத்தில் கருவறையின் கூரை மீது அமைக்கப்படும் விமானங்கள் ஒற்றைத் தளத்தையே கொண்டிருந்தன. சோழர் காலத்தில் தான் அதிக அளவு அடுக்குகள் கொண்ட விமானங்கள் அமையப்பெற்றன. தஞ்சை, தாராசுரம், கங்கை கொண்ட சோழபுரம், திரிபுவனம் போன்றவை பல அடுக்குகள் கொண்ட விமானங்களைக் கொண்டுள்ளன.

பிற்காலத்தில் பழையபடியே கருவறை மீது அமையும் விமானத்தை இரண்டு அல்லது மூன்று அடுக்குகளுடன் அமைத்துவிட்டு திருக்கோயிலின் வாயிலின்மீது அழகிய கோபுரங்களைக் கட்டத்துவங்கினர். விஜய நகர மன்னர்கள், இதற்கு முன்னோடியாக இருந்தனர். கோபுரங்களை இராஜகோபுரம் என்றும் அவற்றின் அடுக்குகளை நிலைகள் என்றும் அழைப்பர்.





## அருள்மிகு ஐராவதேசுவரர் திருக்கோயில்

### அபிஷேகபுரம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு ஐராவதேஸ்வரர் |
| இறைவி | அருள்மிகு அபிஷேகவல்லி |
| ஆகமம் | காமீகம் |

சேவூர் குன்னத்தூர் சாலையில் சேவூரிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ள திருத்தலம் – அவிநாசியிலிருந்து குன்னத்தூர் செல்லும் சாலை வழியாகவும் சென்றடையலாம்.

“ஐராவதம்” என்ற வெள்ளை யானையே இந்திரனின் வாகனம். ஒரு சமயம் துர்வாச முனிவர் அளித்த தாமரை மலரை, இந்திரன் அதனிடம் கொடுக்க, அது தனது காலால் மலரை மிதித்தெறிந்தது. கோபமுற்ற முனிவர், அதனை காட்டு யானையாகத் திரிந்திட சாபமிட்டார். அந்த யானை பல சிவ தலங்களை வலம் வந்து சாபத்தைப் போக்கிக் கொண்டது. அதில் ஒரு தலம் தான் அபிஷேகபுரம்.

அண்மையில் மிகச்சிறந்த முறையில் திருப்பணி செய்விக்கப்பட்டு குடமுழுக்கும் நடைபெற்றுள்ளது. மூலவர் ஐராவதேசுவரர். கொங்கு நாட்டில் உள்ள பெரிய சிவலிங்கத் திருமேனிகளில் ஒன்று. கம்பீரமான தோற்றம் கொண்ட சுயம்பு மூர்த்தி.

அன்னை "அபிஷேகவல்லி" என்ற திருநாமத்துடன் எழுந்தருளியுள்ளார்.

அருகிலேயே அழகுராஜப் பெருமாள் ஆலயமும் உள்ளது. திருமகள், நிலமகளோடு, பெருமாள் சேவை சாதிக்கிறார். நவகிரக பரிகாரத் தலங்களில் இந்தத்தலம் "சுக்ரன்" தலம் ஆகும்.

நாள்தோறும் இரண்டு கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி

## மிகப்பெரிய சிவலிங்கம்

தஞ்சை பெருவுடையார் திருக்கோயில் கருவறையில் உள்ள சிவலிங்கமே, உலகில் மிகப்பெரிய திருமேனியாகும். ஆறு அடி உயரமும், 54 அடி சுற்றளவும் கொண்ட ஆவுடையார் (பீடம்), 13 அடி உயரமும் 23.1/2 அட சுற்றளவும் கொண்ட சிவலிங்கத்திருமேனி இது.





## அருள்மிகு
## உத்தமலிங்கேசுவரர் திருக்கோயில்
### பெருமாநல்லூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு உத்தமலிங்கேஸ்வரர் |
| இறைவி | அருள்மிகு கோவர்த்தனாம்பிகை அம்மன் |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | காரணாகமம் |

அவிநாசியில் இருந்து ஈரோடு செல்லும் சாலையில் 10 கி.மீ. தொலைவில் உள்ளது பெருமாநல்லூர். பேருந்து நிலையத்திற்கு அருகில் வலப்புறம் சிவாலயமும், இடதுபுறம் அதனை எதிர்நோக்கி கொண்டத்துக்காளியம்மன் திருக்கோயிலும் அமைந்துள்ளன.

பழங்காலத்தில் வயல்கள் நிறைந்த பகுதியாக இருந்ததால் “பழமை” என்றும் “பெரும் பழபுரி” என்றும் அழைக்கப்பட்டு காலப்போக்கில் பெருமாநல்லூர் என்று மருவியது. கூத்தனூர் என்றும் பெருந்தொழுவு என்றும் அழைக்கப்பட்டது.

13ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாகக் கூறப்படும் இத்திருக்கோயில், இராஜராஜ உத்தமசோழன், உத்தமசோழ வீர பாண்டியன் ஆகியோரால் திருப்பணி செய்விக்கப்பட்டதால், ‘உத்தமலிங்கேசுவரர்’ என்ற பெயரோடு அழைக்கப்படுகிறார்.

மேற்கு நோக்கிய திருக்கோயில் இது. பூவுலகில் தீவினை பெருகியபோது சினங்கொண்டு “மண்மாரி” பெய்திடச் செய்தார். அப்போது, அழிவிலிருந்து காத்திடுமாறு அன்னை உமாதேவியைத் தேவர்கள் வேண்டியபோது, அன்னை பூவுலகத்திற்கு வந்து, பெரும்பழமைஎன்ற வில்வமரக்காட்டில், மேற்கு திசை நோக்கி கடும் தவமிருந்தார்.

அப்போது அன்னைக்கு காட்சி தந்த ஈசன், உத்தமலிங்கேசுவரர் என்ற பெயரில் எழுந்தருளினார். அன்னையும் ஆவுடைநாயகி என்ற பெயரோடு அருகிலேயே கோயில் கொண்டாள். சோழர்கள் பிற்காலத்தில் கோயில் எழுப்பினர். ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன், தெற்கு நோக்கியபடி அருள் பாலிக்கிறார். வெளிச்சுற்றில் பரிவார தெய்வங்கள் இடம் பெற்றுள்ளன.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.30 மணி – பகல் 1.00 மணி

மாலை 5.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி : 0421 – 2350544





## அருள்மிகு
## கொண்டத்துக்காளியம்மன் திருக்கோயில்
### பெருமாநல்லூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கொண்டத்துகாளியம்மன் |
| ஆகமம் | காரணாகமம் |

கொங்கு நாட்டில், பண்ணாரி, பாரியூர், சூலக்கல், வனபத்ரகாளி, மாசாணியம்மன், மாங்கரை அம்மன், தண்டுமாரியம்மன், கண்டியம்மன் ஆகிய பல அம்சங்களோடு நிறைந்திருக்கும் அன்னை பராசக்தி "கொண்டத்துக்காளி" என்ற பெயரோடு பெருமாநல்லூரில் அருள் பாலிக்கிறாள்.

வாமன முனிவர், அரச குமாரர்களுக்கு போர்ப்பயிற்சி அளித்து வந்தவர். அசுரர்கள் அவரை பலவாறு துன்புறுத்தினர். அப்போது அவர்தம்மைக் காத்திட காளியம்மனை நோக்கித் தவம் செய்தார். அசுரர்படை திக்காசுரன் என்பவன் தலைமையில் திரண்டிட, காளியம்மன் அவர்களை எதிர்கொண்டு, அழித்து, மகரிஷிக்கு காட்சி தந்தார்.

அதன் பிறகு போர் முனைக்குச் செல்லும் முன்பு, காளியம்மனுக்கு குண்டம் அமைத்து, அதனுள் இறங்கி அன்னையின் சக்தியையும் திருவருளையும் பெற்றுப் போர்முனைக்குச் செல்லுமாறு சீடர்களுக்கு அறிவுறுத்தினார். இவ்வாறு குண்டம் இறங்குவோர் "வீரமக்கள்" என்று அழைக்கப்படலாயினர்.

எட்டு கரங்களோடு சூலம், உடுக்கை, கத்தி, மழு, சக்கரம், கபாலம் மற்றும் அன்னப்பறவை ஆகியவற்றை எந்தியபடி மூன்று சக்திகளும் ஒன்றாக இணைந்தபடி காட்சி தருகிறாள் கொண்டத்துக்காளியம்மன். வடதிசை நோக்கி அன்னை கொலுவீற்றிருப்பது தனிச்சிறப்பு ஆகும். மகா மண்டபத்தின் முன்னே காவலர்களாக, நீலன், நீலி, சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன.

பங்குனி மாதத்தில் குண்டம் திருவிழா நடைபெறும். செவ்வாய், வெள்ளிக்கிழமை, அமாவாசை, பௌர்ணமி ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

நாள்தோறும் இரண்டு கால வழிபாடு நடைபெறுகிறது.

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப் பட்டுள்ள அன்னதானத்திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 1.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 9.00 மணி

தொலைபேசி: 0421 – 2350522





# அருள்மிகு
# செங்க விநாயகர்
# திருக்கோயில்
## செங்கப்பள்ளி

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு விநாயகர் |
| ஆகமம் | காமீகம் |

திருப்பூருக்கு வடகிழக்கே, அவிநாசி – ஈரோடு நெடுஞ்சாலையில் அமைந்துள்ள திருத்தலம் செங்கப்பள்ளி, நெடுஞ்சாலைக்கு மிக அருகில் உள்ள சிறிய கோயில். பதினாறு கிராமங்களை உள்ளடக்கிய, இப்பகுதியில் சோழர்கள் காலத்தில் ஏராளமான விளை நிலங்கள், கோயிலுக்கு தானமாக வழங்கப்பட்டுள்ளன.

கொங்குச் சோழர்கள் ஆண்ட காலத்தில் உருவான பழைய சிவாலயம் இது. சோழன் வழிபட்டதால் மூலவர் சோழீசுவரர் என்று அழைக்கப்பட்டார். மேற்கு திசை நோக்கிய கருவறை, எதிரில் நந்திதேவர் அமர்ந்துள்ளார்.

ஆனால் இன்று, மூலவர் கருவறையில், சிவலிங்கத் திருமேனிக்குப் பதிலாக விநாயகரே இடம் பெற்றுவிட்டார். கருவறை நுழைவாசலின் இடதுபுறம் மூலலிங்கத் திருமேனியை எடுத்துவைத்துள்ளனர். சோழீசுவரர் திருக்கோயில் என்ற பெயர் மாறி செங்கப்பள்ளி விநாயகர் என்று பொருள்படும்படி செங்க விநாயகர் என்று அழைக்கப்படுகிறார். நாள்தோறும் ஒரு கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் இந்நேரம்:**

காலை : 7.00 மணி – இரவு 9.00 மணி.



## அருள்மிகு
## காசி விசுவநாதர்
## திருக்கோயில்
**கூனம்பட்டி**

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு காசிவிஸ்வநாதர் |
| இறைவி | அருள்மிகு விசாலாட்சி |
| தல விருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமீகம் |

திருப்பூருக்கு வடகிழக்கே, அவிநாசி – ஈரோடு நெடுஞ்சாலையையொட்டி, செங்கப்பள்ளியை அடுத்து அமைந்து உள்ளது கூனம்பட்டி. நெடுஞ்சாலையில் பல்லகவுண்டன்பாளையம் பேருந்து நிறுத்தத்திற்கு வடதிசையில் 1.1/2 கி.மீ. தொலைவில் உள்ளடங்கி உள்ள சிற்றூர் கூனம்பட்டி.

கொங்குச் சோழர்கள் ஆண்டகாலத்தில் அவிநாசி முதல் பெருந்துறை வரை நெடுகிலும் பல சிவாலயங்களும், திருமால் ஆலயங்களும் உருவாகியுள்ளன. செங்கப்பள்ளிக்கும், விஜயமங்கலத்திற்குமிடையே சற்று வடக்கில் அமைந்த தலம் கூனம்பட்டி. சமயப் பெரியார்கள் தவமிருந்து உருவாக்கிய ‘மாணிக்கவாசகர்’ திருமடம், ஆலயத்தையொட்டி அமைந்துள்ளது.



பாணலிங்கமாக அமைந்ததால், காசி விசுவநாதர் என்று மூலவர் திருநாமங்கொண்டுள்ளார். பொதுவாக கங்கை, நர்மதை, நதிக்கரைகளில் கிடைக்கும் உருண்டையான லிங்கங்களை பாணலிங்கம் என்பர். அப்படி அவற்றைக் கொண்டுவந்து கோயில்களில் பிரதிஷ்டை செய்யும் போது பெரும்பாலும் காசிவிஸ்வநாதர் என்றே பெயிரிடுவர்.

காசிவிசுவநாதர் - விசாலாட்சியம்மை அருள்பாலிக்கும் தலம் கூனம்பட்டி. தனித்தனி சந்நிதிகள், பரிவார தேவதைகளும், நவக்கிரகங்களும் முறையே வெளிச்சுற்றில் இடம் பெற்றுள்ளனர். இராஜகோபுரம் இல்லை. கருவறையை ஒரு தள விமானம் அழகுபடுத்துகிறது.

நாள்தோறும் இரண்டுகால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி





## அருள்மிகு
## திருமுருகநாதசுவாமி திருக்கோயில்
### திருமுருகன்பூண்டி

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு திருமுருகநாதசுவாமி |
| இறைவி | அருள்மிகு முயங்குபூண்முலை அம்மன் |
| தீர்த்தம் | பிரம்ம, சுப்ரமணிய, ஞான தீர்த்தம் |
| தல விருட்சம் | குறுக்கத்தி மரம் |
| ஆகமம் | காமீக ஆகமம் |

திருப்பூர் – அவிநாசி சாலையில் 5 கி.மீ தொலைவில் உள்ளது. பேருந்து நிறுத்தத்திலிருந்து கிழக்கே 200 மீ. தொலைவில் உள்ளடங்கி இருக்கிறது. திருக்கோயில். கொங்கு ஏழு திருத்தலங்களில் ஒன்று.

கந்தமாபுரி, காஞ்சிமாநகர், முல்லைவனம், மாதவவனம் என்று அழைக்கப்பட்டது. சுந்தரர் தேவாரத்தில் "மாநகர்" என்றும் அருணகிரிநாதரால் "கொங்குராஜாபுரம்" என்றும் அழைக்கப்பட்டது. இறைவன் பூதகணங்களை ஏவி, சுந்தரரிடம் வழிப்பறி செய்த தலம்.

சூரனை அழித்த கொலைப்பழி நீங்கிட முருகப் பெருமான் ஈசனை வழிபட்ட திருத்தலம். அதனால் முருகநாத ஈசுவரர் என்று அழைக்கப்படுகிறார். சுந்தரமூர்த்தி நாயனார்,

இவ்வழியே செல்லும் போது, இறைவன் பூதகணங்களை வேடர் வடிவில் ஏவி, சுந்தரரின் செல்வங்களை "வேடுபரி" செய்த தலம். அன்னை முயங்கு பூண்முலை வல்லியம்மை.

"என் பொருள்கள் களவுபோக, நீ பார்த்துக் கொண்டு எதற்கு இங்கிருந்தாய்" எனப்பாடி, சுந்தரர் பொருட்களை திரும்பப் பெற்றார். அதற்கேற்ப பொருளை இழந்து வாடிய முகத்துடனும், பொருளை மீண்டும் பெற்ற மகிழ்ச்சி நிலையிலும், சுந்தரரின் இரு சிலை வடிவங்களை திருக்கோயிலில் காணலாம். அருகிலேயே வேடுவர் உருவமும் உள்ளது.

சண்முகநாதர் சந்நிதி, சிறப்பு வாய்ந்தது. பிரம்மதீர்த்தம், ஞான தீர்த்தம், சுப்ரமணிய தீர்த்தம் என மூன்று தீர்த்தங்கள் உள்ளன. சித்தபிரமைகொண்டோர் இங்கே தங்கி, குணமடைகின்றனர். பிரமதாண்டவ நடராசப் பெருமான் சந்நிதி, தனிச்சிறப்பு வாய்ந்தது.

சற்று தொலைவில் மாதவனேசுவரர் திருக்கோயிலும் உள்ளது. இங்கு நவக்கிர பரிகாரத் தலங்களில் "கேது" தலம். மேற்கு திசை நோக்கிய திருக்கோயில் உள்ளது.



“கூப்பிடு விநாயகர்” அவிநாசி செல்லும் சாலையில் 1 கி.மீ. தொலைவில் உள்ளார்.

நவக்கிரத் தலங்களில், ‘கேது’ பரிகாரத்தலம் இது. ‘கேது’ விற்கு தனி சந்நிதியும் உள்ளது. மாசி மாதத்தில் பெருவிழா நடைபெறுகிறது. கொங்கு மண்டல சதகம், “பூன் முருகன் பூண்டி” என இதைச் சிறப்பித்துள்ளது. அருணகிரிநாதர் திருப்புகழ் பெற்ற திருத்தலம். நாள்தோறும் நான்கு கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 04259 – 273507.

## 1000 சிறு தூண்கள்

ஆயிரம் சிவலிங்கங்களைத் தன்னுள் கொண்ட சகஸ்ரலிங்கத் திருமேனியாகக் காண்கிறோம். இதனைப் போலவே ஆயிரம் சிறு தூண்களைத் தன்னுள் கொண்ட “பெருந்தூண்” ஆவுடையார் கோயிலில் அம்மநாதசுவாமி ஆலயத்தில் உள்ளது.

# நவக்கிரகத்தலங்கள் சுற்றுலா

## பயணத் திட்டம்

1. பெருமாநல்லூர் – சூரியன் தலம்
   அ/மி. உத்தமலிங்கேசுவரர், திருக்கோயில்.
2. திங்களூர் – சந்திரன் தலம்.
   அ/மி.சந்திரமௌலீசுவரர் திருக்கோயில்.
3. சென்னிமலை – செவ்வாய் தலம்,
   அ/மி. சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்.
4. மொண்டிபாளையம் – புதன்தலம்,
   அ/மி. வெங்கடேசப்பெருமாள் திருக்கோயில்.
5. அன்னூர் – குரு தலம்,
   அ/மி. மன்னீசுவரர் திருக்கோயில்.
6. அபிஷேகபுரம் – சுக்கிரன் தலம்.
   அ/மி. அழகுராஜப்பெருமாள் திருக்கோயில்.
7. கோயில்பாளையம் – சனிதலம்,
   அ/மி. காலகாலேசுவரர் திருக்கோயில்
8. தங்கமேடு – ராகுதலம்.
   அ/மி. தம்பிக்கலை அய்யன் திருக்கோயில்.
9. திருமுருகன்பூண்டி – கேது தலம்,
   அ/மி. மாதவனேசுவரர் திருக்கோயில்.





## அருள்மிகு
## வீரராகவப்பெருமாள் திருக்கோயில்
### திருப்பூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வீரராகவப்பெருமாள் |
| இறைவி | கனகவல்லி தாயார், பூமாதேவி தாயார் |
| தல விருட்சம் | மகிழ மரம் |
| ஆகமம் | பாஞ்சராத்ராகமம் |

திருப்பூர் பழைய பேருந்து நிலையத்திற்கு மிக அருகில் அமைந்துள்ள திருக்கோயில். காஞ்சி மாநதியின் தென்பகுதியில் அமைந்துள்ள சிறப்பான வைணவத்தலம்.

மகாபாரதக் கதையில், விராட பருவம் எனும் பகுதியைச் சுற்றி அமைந்த தலவரலாற்றைக் கொண்டது. பாண்டவர்கள் எவரும் அறியாமல் "அஞ்ஞாதவாசம்" இருந்த நாட்களில், கௌரவர்கள் அவர்களது பசுக்களை ஒட்டிச் செல்ல, பாண்டவர்கள் அவர்களை விரட்டியடித்து பசுக்களை மீட்டனர். பசுக்களைத் திருப்பி அழைத்து வருகையில், இத்தலத்தில் திருமாலை வணங்கினராம்.

அழகிய மூன்று நிலை இராஜகோபுரத்துடன் கூடிய திருக்கோயில், இரண்டு சுற்றுப் பிரகாரங்களைக் கொண்டபடி, கிழக்கு திசையை நோக்கியவாறு அமைந்துள்ளது. தெற்கில் திருமுகமும், வடக்கில் திருவடியும் கொண்டு புஜங்க சயனத்தில், அழகுறக் காட்சி தந்து அருள்பாலிக்கிறார் வீரராகவப் பெருமாள்.

சயனக்கோலத்தில் இருந்தாலும், மரக்கால் படி ஒன்றைத் தலைக்கு வைத்தபடி, பக்தர்களைப் பார்த்தபடி காட்சி தருவது வீரராகவப் பெருமாளின் தனிச்சிறப்பு, சிறப்பு வழிபாடு நாட்களில் "முத்தங்கி சேவை", நெஞ்சங்களைக் கொள்ளை கொள்ளும். படியளந்த பெருமாள் என்றும் வேறு ஒரு திருநாமம் உண்டு.

"கனகவல்லித் தாயார்" என்ற திருநாமத்துடன் தனிச் சந்நிதி கொண்டுள்ளார். ஸ்ரீதேவி, உற்சவர் மகாலட்சுமித் தாயார். வியாசராயர் பூஜித்த ஆஞ்சநேயர் திருமேனி, பழமையானது. வெற்றிலை மாலை சார்த்தி வழிபடுதல், இவரது சந்நிதியில் தனிச்சிறப்பு ஆகும்.

பெருமாளுக்கு "திருவோணம்" நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுவதுபோல, திருஆதிரை நாட்களில் கருடாழ்வாருக்கு சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

உக்கிர நரசிம்மரும், யோக நரசிம்மரும் புடைப்புச் சிற்பமாக அமையப்பெற்ற கல்தூண் ஒன்று, பக்தர்களின் கவனத்தைக் கவருவதாக உள்ளது. 16 கால் மண்டபம் ஒன்று இங்கே இருந்ததாகவும், காலப்போக்கில், அது உருக் குலைந்து, ஒரு கல்தூண் மட்டுமே "மிச்சம்" ! என்பர்.

வைகாசி மாதத்தில் நடைபெறும் பெருவிழாவில், அருகில் உள்ள சிவாலயத்தின் விசுவேசுவரரும் பெருமாளும்







ஒன்றாகத் தேரில் வலம் வருவது, திருப்பூருக்கே உள்ள தனிச்சிறப்பாகும்.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

அன்னதானம்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 0421 – 2204101



## அருள்மிகு
## விஸ்வேஸ்வரசுவாமி திருக்கோயில்
### திருப்பூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு விஸ்வேஸ்வரசுவாமி |
| இறைவி | அருள்மிகு விசாலாட்சியம்மன் |
| தீர்த்தம் | தீர்த்தக்கிணறு |
| தல விருட்சம் | பாதிரி மரம் |
| ஆகமம் | காரண ஆகமம் |

திருப்பூரின் மையப்பகுதியிலேயே அமைந்துள்ளது. விஸ்வேஸ்வரசுவாமி திருக்கோயில், வீரராகவப்பெருமாள் திருக்கோயிலுக்கு மிக அருகாமையில் உள்ளது.

விசுவநாதரே இங்கு விசுவேசுவரர் என்ற திருநாமத்துடன் எழுந்தருளியுள்ளார். கிழக்கு நோக்கிய சந்நிதி. அன்னை விசாலாட்சியம்மை தனிச்சந்நிதி கொண்டுள்ளார்.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.



திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 - பகல் 12.00 மணி

மாலை 4.00 - இரவு 8.00 மணி

தொலைபேசி: 0421 - 2204101



## அருள்மிகு
## விசுவேசுவரசுவாமி திருக்கோயில்
### நல்லூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு விசுவேசுவரசுவாமி மற்றும் |
| | அருள்மிகு சுப்பிரமணியசுவாமி |
| இறைவி | அருள்மிகு விசாலாட்சியம்மன் |

திருப்பூருக்கு கிழக்கே 4 கி.மீ தொலைவில், காங்கேயம் செல்லும் பாதையில் அமைந்துள்ளது. நொய்யலாற்றின் கரையில் கிழக்கு வாயிலைக் கொண்டு அமைந்த ஆலயம். கொங்குச் சோழர்களால் கட்டப்பட்டது.

சுந்தரபாண்டியன் கொங்கு நாட்டிற்கு வந்தபோது உருவாக்கிய ஊராகையால், "சுந்தரபாண்டிய நல்லூர்" என்று அழைக்கப்பட்டதாம். இரண்டு நிலை இராஜகோபுரமும், திருச்சுற்றும் கொண்ட அழகிய ஆலயம்.

ஆலயத்தின் எதிரில் கருங்கல்லினால், ஆன தீபத்தம்பம் உள்ளது. விசுவேசுவரர், விசாலாட்சி, முருகப்பெருமான், விநாயகர், நவக்கிரகங்கள், பைரவர் சந்நிதிகள் உள்ளன. நாள்தோறும் நான்கு கால வழிபாடு நடைபெறுகிறது. பிரதோஷம் மற்றும் மாதாந்திர சிறப்பு வழிபாடுகளும் உள்ளன.



**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 - பகல் 12.00 மணி

மாலை 5.00 - இரவு 8.00 மணி



## அருள்மிகு
## அங்காளம்மன் திருக்கோயில்
### முத்தணம்பாளையம்

| | |
|---|---|
| இறைவி | அருள்மிகு அங்காளம்மன் |
| தல விருட்சம் | வேம்பு மரம் |
| ஆகமம் | காமீக ஆகமம் |

திருப்பூரிலிருந்து காங்கேயம் செல்லும் சாலையில் 7 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள திருக்கோயில். பாண்டிய மன்னர்களால் 700 ஆண்டுகளுக்கு முன்னர் இக்கோயில் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. (1265-1300) திருக்கோயில் சுற்றுப்புறங்களில் 'மீன்' சின்னங்கள் அதிகம் காணப்படுகின்றன.

திருக்கோயிலின் முன்னே 60 அடி உயரம் கொண்ட கருங்கல்லினாலான தீபத்தம்பமும், நான்கு கால் மண்டபமும் கோயிலின் பழமையை உறுதிப்படுத்துகின்றன. தமிழ்ப் புத்தாண்டு நாளன்று, சூரியனின் ஒளிக்கதிர்கள் கருவறையில் உள்ள அங்காளம்மன் முகத்தில் படிவது தனிச்சிறப்பு. சூரிய ஒளி நேராக கருவறையை அடைந்திட நந்திதேவரும் சற்றே விலகியுள்ளார். "முதலை வாயிலிருந்து மீண்ட மதலை" சிற்பம், அவிநாசி தலவரலாற்றை குறிப்பிடுகிறது.

மூன்றுநிலை இராஜகோபுரமும், அறுபதடி உயர தீபஸ் தம்பமும், திருக்கோயிலுக்கு தனிச் சிறப்பைத் தருகின்றன. மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்ட தெப்பகுளமும், அண்மையில் உருவான மகா மண்டபமும், கோயிலுக்கு அழகூட்டுகின்றன.

புற்றுவடிவில் சுயம்புவாக அங்காளபரமேஸ்வரி எழுந்தருளியுள்ளாள். திருச்சுற்றில் விநாயகர்,முருகன், பேச்சியம்மன் தனித்தனி சந்நிதிகளில் உள்ளனர். புரட்டாசி மாதத்தில் ஆயுத பூஜையன்று, அசுரரை அம்மன் வதம் செய்யும் "அம்பு" சேவை நடைபெறுகிறது. கார்த்திகை தீபத்தன்று தீபத்தம்பத்தில் தீபம் ஏற்றப்படும்.

சிவராத்திரியையொட்டி மாசிமாதம் பத்துநாட்கள் திருவிழா மிகச்சிறப்பாக கொண்டாடப்படும். முதல் நாள் கொடியேற்றம், இரண்டாம்நாள் சிவராத்திரியன்று ஆற்றிலிருந்து நீர் கொண்டுவருதல், நிச்சய தாம்பூலம், மயானபூஜை குறிப்பிடத்தக்கவை. 3ம் நாள் பூவோடு, 4ம் நாள் பரிவேட்டை, 5ம் நாள் வேடுபரி, 6ம் நாள் அம்மன் பவனி, 7ம் நாள் மகா கும்ப பூஜை ஆகியன முடிந்தபின், இறுதிநாள் பேச்சியம்மன் பூஜையுடன் திருவிழா நிறைவுறும்.

அங்காளம்மனைக் குல தெய்வமாகக் கொண்ட 75க்கும், மேற்பட்ட பிரிவினர் ஆடிமாதத்தில் இங்கு வந்து "தலைக் கட்டுப்பொங்கல்" வைப்பார்கள். தங்கள் தலைப்பிள்ளைகளுக்காக பொங்கல் வைத்துக் காணிக்கை செலுத்துவதே "தலைக்கட்டுப் பொங்கல்" பூஜை எனப்படும்.

அன்னதானம்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப் பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

நாள்தோறும் இரண்டு காலவழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி

இரவு 8.00 மணி

தொலைபேசி எண்:

0421 - 2203926





## அருள்மிகு
## வெற்றிவேலாயுதசுவாமி திருக்கோயில்
### கதித்தமலை

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வெற்றிவேலாயுதசுவாமி (முருகன்) |
| இறைவி | அருள்மிகு வள்ளி - தெய்வானை (அம்மன்) |
| தீர்த்தம் | மயூர தீர்த்தம் |
| தல விருட்சம் | பாலை மரம் |
| ஆகமம் | காமீக ஆகமம் |
| இசைக்கருவி | மேளம் வாத்யம் |

திருப்பூரிலிருந்து ஊத்துக்குளி வழியே ஈரோடு செல்லும் பாதையில் 15 கி.மீ. தொலைவில் உள்ளது கதித்தமலை. நெடுஞ்சாலையின் இடதுபுறம் உள்ள குறுக்குப்பாதை வழியே சென்று, மலையைச் சுற்றிலும் அமைந்துள்ள கப்பிச்சாலையை அடையலாம்.

குன்றியிருக்குமிடெமல்லாம் குமரன் இருப்பான் என்பதற்கேற்ப, ஊத்துக்குளி அருகே உள்ள கதித்தமலையில் முருகப்பெருமான் வெற்றிவேலாயுதசுவாமியாக அருள்பாலிக்கின்றார். அருணகிரி நாதரின் திருப்புகழ் கொண்டதும், அகத்திய முனிவர் வழிபட்டதும் ஆகும்.

தாகம் தீர்த்த முருகன்

அகத்திய முனிவர் கதித்தமலையை அடைந்ததும் நைவேத்யம் படைக்க நீரின்றி தவித்தார். அவருக்கு மிகுந்த தாகம் ஏற்பட்டது. அகத்தியர் முருகப்பெருமானை வேண்டிட, தனது வேலினால் தரையைக் குத்தி, ஊற்றுநீர் பெருகச் செய்து அவரது தாகம் தீர்த்தார் வேலாயுதசுவாமி.



முருகனால் உருவாக்கப்பட்ட ஊற்று இன்றும் வற்றாமல் நீரைக் கொடுத்துவருகிறது. குழியிலிருந்து ஊற்று தோன்றியதால் "ஊற்றுக்குழி" என்ற பெயரும் ஏற்பட்டதாம்.

குன்றின் மீது ஐந்துநிலை கொண்ட இராஜகோபுரம் கிழக்கு நோக்கி உள்ளது. கோயிலுக்குள் செல்வதற்கு அகலமான படிக்கட்டுகள் உள்ளன. கோபுரத்தை எதிர்நோக்கியபடி தீபத்தம்பமும் உள்ளது. நெடிய மதிலும், திருச்சுற்றும் கொண்டுள்ள கோயில்.

கருவறையில், நின்ற கோலத்தில் முருகப்பெருமான் வெற்றி வேலாயுதசுவாமி அருள்பாலிக்கிறார். "வேலிருக்க வினை இல்லை" என்ற சொல்லுக்கேற்ப தீவினைகளைத் தகர்த்தெறியும் அருட்கோலம் அது.

முருகப்பெருமானின் சந்நிதிக்கு பின்புறம், திருச்சுற்றையொட்டி, தனியாக அமைந்துள்ளது வள்ளி, தெய்வயானை சந்நிதி. தைப்பூசம், பங்குனி உத்திரம், கந்தசஷ்டி, கார்த்திகை தீபம் விழாக்கோலம் காணும் நாட்கள். தைப்பூசத்தையொட்டி மலைமீது தேரோட்டம் நடைபெறும்.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 - 2.00 மணி

மாலை 4.00 - 7.30 மணி





## அருள்மிகு
## கைலாசநாதர் திருக்கோயில்
### ஊத்துக்குளி

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கைலாசநாதர் (சிவன்) |
| இறைவி | அருள்மிகு ப்ருஹன்நாயகி அம்மன் |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | காமீகமம் |
| இசைக்கருவி | மேளம் வாத்யம் |

திருப்பூருக்கு வடகிழக்கே ஈரோடு செல்லும் பாதையில், 20 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. ஊத்துக்குளி முருகப்பெருமான் அகத்திய முனிவருக்காக தனது வேலினால் தரையைக் குத்தி ஊற்றுநீர் பெருகிடச் செய்ததாக தல வரலாறு சிறப்பிக்கிறது.

முருகப்பொருமான் தோற்றுவித்த குழியிலிருந்து நீர் ஊற்று தோன்றியதால் "ஊற்றுக்குழி" எனப் பெயர் கொண்டது. அதுவே நாளடைவில் "ஊத்துக்குளி" என்று மருவிவிட்டது.

நானூாறு ஆண்டுகளுக்கு முற்பட்ட கற்றளியாக கைலாசநாதர் திருக்கோயில் ஊரின் நடுவே அமைந்துள்ளது. இராஜகோபுரம் இல்லை. பதினாறு கால் மகாமண்டபம், சிற்பங்கள் கொண்ட அழகிய தூண்களுடன் அழகுற அமைந்துள்ளது.

மூலவர் கருவறை முற்றிலும் கற்றளியாக அமைந்துள்ளது. நுழைவாசலில் டிண்டி - முண்டி துவாரபாலகர்கள் இடம் பெற்றுள்ளனர். கைலாசநாதர், சதுரபீடத்தில் எழுந்தருளியுள்ளார். கருவறையின் முகப்பு நுழைவாசல், பித்தளைத் தகடுகள் பொருத்தப்பட்டு பளிச்சிடுகிறது.

அன்னை பெரியநாயகி, வட மொழியில் பிரகன் நாயகி என அழைக்கப்படுகிறார். தனிச்சந்நிதி கொண்டு முருகப்பெருமான் சோமாஸ்கந்தராக, கைலாசநாதருக்கும், பெரியநாயகிக்கும் இடையே இடங்கொண்டுள்ளார்.

நாள்தோறும் இரண்டு கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி பகல் 12.00 மணி

மாலை 5.00 மணி இரவு 8.00 மணி






## அருள்மிகு
## வாழைத் தோட்டத்து அய்யன் திருக்கோயில்
### அய்யம்பாளையம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வாழைத் தோட்டத்து அய்யன் |
| தல விருட்சம் | கிழுவை மரம் |
| ஆகமம் | காரணாகமம் |

திருப்பூருக்கு தென்மேற்கே, சோமனூர் எனும் ஊருக்கு அருகில் உள்ளது அய்யம்பாளையம். திருப்பூரிலிருந்து 18 கி.மீ. அய்யம்பாளையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவில் உள்ளது "பெருந்தோட்டம்". அங்கே அமைந்துள்ளது திருக்கோயில்.

அய்யன்பாளையத்திற்கருகில் உள்ள காளிபாளையம் என்னும் ஊரில் வாழைத்தோட்டம் ஒன்றை குத்தகைக்கு சாகுபடி செய்து வந்ததால் அவருக்கு "வாழைத் தோட்டத்து அய்யன்" என்று பெயரே நிலைத்து விட்டது. கொங்கு நாட்டு சிறுதேவதைகளான நாட்டுராயன், ஆகாசராயன், தம்பிக்கலை அய்யன் என்பவை போல வாழைத்தோட்டத்து அய்யன் திருக்கோயிலும் சிறந்த பிரார்த்தனை தலமாக விளங்குகிறது.

150 ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த உண்மைச் சம்பவம் இது. விவசாய குடும்பத்தில் பிறந்த குழந்தையான சின்னையன், இளமையிலேயே பக்தியும் நன்னடத்தையும், ஒழுக்கமும் கொண்டு வாழ்ந்தவன். தனது குடும்பத்தின் ஆடுமாடுகளை மேய்த்துவந்து நிலத்தில் ஒரு கல்லை நிறுவி அதனையே சிவலிங்கமாக பாவித்து நாள்தோறும் பூஜை செய்துவந்தான்.

ஒருநாள் சிவ வழிபாட்டில் மூழ்கியிருந்த அவனது சிந்தையில் ஜடாமுடி தாங்கிய முனிவர் ஒரு வினாடி தோன்றி மறைந்தார். கண்விழித்துப் பார்க்கையில், அவன் எதிரிலேயே அவர் அமர்ந்திருக்கக் கண்டான் சின்னையன். அருகிலோ ஒரு பாம்பு படமெடுத்து ஆடிக்கொண்டிருந்தது. அவர் பாதம் தொட்டு வணங்கினான் சிறுவன். அப்போது அவர் ஊர்ந்து சென்ற பாம்பை அசையாமல் நிற்க தான் கட்டளையிட்டதாக கூறுமாறு சின்னையனைப் பணிந்தார். சின்னையனும் அவ்வாறே உத்தரவிட, சர்ப்பம் அசையாது நின்றது. அதிசயித்தான் சின்னையன். உடனே அந்த அரவத்தை அந்த இடத்தை விட்டுச் செல்லுமாறு உத்திரவிடச் சொன்னார் பெரியவர். அரவமும் மறைந்து சென்றது.

அவரது பாதங்களில் விழுந்து வணங்கிய சின்னையன். நாகம் போன்ற விஷ ஜந்துக்களால் துன்புறும் மக்களுக்கு அவற்றிடமிருந்து காத்திடும் வழியை போதிக்க வேண்டுமாய் பிரார்த்தித்தான். ஊராருக்கு உதவும் உத்தமகுணம் அவனிடம் உள்ளதைக் கண்டு அகமகிழ்ந்த அந்த சித்தர், “சர்வ விஷ சம்கார மந்திரத்தை” அவனுக்கு உபதேசித்தார். மூன்றாண்டுகள் தொடர்ந்து அந்த மந்திரத்தைக் கொண்டு மக்களுக்கு பேருபகாரம் செய்து வந்தான் சின்னையன்.

திருமணம் செய்துகொண்டு இல்லற வாழ்க்கையை நடத்திக் கொண்டே மக்கள் சேவையும், செய்துவந்தான் சின்னையன். ஒருநாள் சித்தர் அவனது கனவில் தோன்றி,



“72 வது வயதுடன் உனது ஆயுள் முடிவடையும், நந்திதேவர் மூலமாக கயிலைநாதர் உன்னை அழைத்துச் செல்வார்” எனக்கூறி மறைந்தார். அந்த நாளும் வந்தது திருவாதிரை நட்சத்திரம் கூடிய நந்நாள் அது. தனது குடும்பத்தாரை சிதம்பரத்திற்கு அனுப்பிவைத்துவிட்டு, தான் பிரியமுடன் வளர்ந்துவந்த காளைக் கன்றைத் தேடித் தோட்டத்துக்கு வந்தார். அப்போது சித்தர் கூறியபடி நந்திதேவரே, அந்தக் காளையின் உடலுக்குள் புகுந்தது போல, சின்னையனை நோக்கி விரைந்து வந்த தனது கூரிய கொம்புகளால், அவரது வயிற்றில் குத்தி மேலே தூக்கியது. அவ்வளவுதான் சின்னையனின் உயிர் பிரிந்தது. வானில் சிவனும் அம்மையும் தோன்றினர்.

ஆறுமாதங்கள் கழித்து, தோட்டத்து வேலையாளின் கனவில், சின்னையன் தோன்றி, “வாழைத் தோட்டத்திலேயே, கிளுவை மரத்தடியில் நான் குடிக்கொண்டிருக்கிறேன். விடிந்ததும் நொய்யலாற்றில் தேடினால் ஒரு சிவலிங்கம் கிடைக்கும், அதனை மரத்தடியில் வைத்துக் காலை, மாலை பூசை செய்” என்று கூறினார்.

அதன்படியே, சிவலிங்கத்தையும் தேடிக் கண்டுபிடித்து, கிளுவை மரத்தினடியில் வைத்து, காலை, மாலை பூசை செய்யத்துவங்கினர் அவனது குடும்பத்தினர். அங்கே தோன்றிய புற்றுமண்ணே பிரசாதமாகவும் அமைந்தது. அன்று முதல் கொடிய விஷ ஜந்துக்களால் பாதிக்கப்பட்டவர்கள்

புற்றுமண்ணைப் பூசிக்கொண்டு ஏழுநாட்கள், அய்யன் கோயிலிலேயே தங்கி குணமடைவதைக் கண்டனர். ராகு – கேது தோஷ பரிகாரத் தலமாகவும் அமைந்தது அய்யன் கோயில்.

அரசமரத்தடி விநாயகர், முருகப்பெருமான், ராகு – கேது நடராஜர் நால்வர், ஆகியோரையும் வெளிச்சுற்றில் வணங்கி வழிபடலாம். அரசமரத்தடியில் நாகப்பிரதிஷ்டையும் சின்னையனை காளை முட்டித்தாக்கும் சிற்பமும் உள்ளன. மார்கழி மாதம் திருவாதிரை நாள், சின்னையன் முக்திபெற்ற நாள், அந்த நாளில் தான் இக்கோயிலில் திருவிழா.

மூன்று நிலை இராஜகோபுரத்துடன் கூடிய திருக்கோயில் முன்பு கருங்கல்லினாலான தீபத்தம்ப மண்டபமும், இரண்டு குதிரைகளும் உள்ளன. ஞாயிறு, செவ்வாய், வெள்ளி ஆகிய நாட்கள் பக்தர் கூட்டம் அலை மோதும் நாட்களாகும். தீராத நோய்களையும், பாம்பு, தேள் போன்ற விஷக்கடிகளிலிருந்து நிவாரணம் தரும் சிறந்த பிரார்த்தனைத்தலம் வாழைத்தோட்டத்து அய்யன்கோயில் ஆகும்.

. வாழைத் தோட்டத்து அய்யனை வணங்கிட வரும் பக்தர்கள் பூசாரிகளின் உதவியின்றி, தாங்களே பூஜை செய்யலாம். கருவறைக்குள் பெண்களுக்கு அனுமதி இல்லை.

நாள்தோறும் நான்கு கால வழிபாடு நடைபெறுகிறது.

<u>அன்னதானம் :</u> மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்ட வருகிறது.

பக்தர்கள் தங்குவதற்கு விடுதியும், திருமண மண்டபமும் பராமரிக்கப்பட்டு வருகின்றன. மேல்நிலைப்பள்ளி ஒன்றும் திருக்கோயிலால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 0421 – 2322250



## அருள்மிகு
## சுக்ரீசுவரர் திருக்கோயில்
### சர்க்கார்பெரியபாளையம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சுக்ரீஸ்வரர் (சிவன்) |
| இறைவி | அருள்மிகு ஆவுடைநாயகி அம்மன் |
| தீர்த்தம் | தெப்பக்கிணறு (எ) தீர்த்தக்கிணறு |
| தல விருட்சம் | மாமரம் |
| ஆகமம் | காமீகம் |
| இசைக்கருவி | மேளம், வாத்யம் |

திருப்பூரிலிருந்து ஈரோடு செல்லும் சாலையில் 10கி.மீ. தொலைவில் உள்ளது. தொலைவில் உள்ளது. “குரக்குத்தளி” என்றும் அழைக்கப்படும். கொங்கு நாட்டு வைப்புத்தலம். பெரியபாளையம் பேருந்துநிலையத்திலிருந்து இடப்புறம் பிரியும் சாலையில் 1 கி.மீ. சென்று கோயிலை அடையலாம். தொல்பொருள் ஆய்வுத்துறையின் பராமரிப்பில் உள்ள கற்கோயில்.

சுமார் 2300 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பது தொல்லியல் துறை ஆய்வின் முடிவு.

முகுந்தபுரி, முசுகுந்தபுரி என்றும் அழைக்கப்பட்டது. கல்வெட்டுக்களில் இறைவன் "ஆளுடைய பிள்ளை" என்று குறிக்கப்படுகிறார்.

இராவணனுடன் போர்செய்து, அசுரர்களைக் கொன்ற பாவம் தீர ராமபிரான், ராமேசுவரத்தில் "சிவலிங்கம்" நிறுவி பூஜை செய்தார். அவருக்கு உதவியாக நின்ற சுக்ரீவனும், அனுமனும், தங்களது பாவத்தைப் போக்கிக்கொள்ள வழிபட்ட தலம் இது. சுக்ரீவன் வழிபட்டதால் ஈசன் "சுக்ரீசுவரர்" என்று அழைக்கப்படுகிறார். அருகில் "அனுமன்பள்ளி" என்ற ஊரும் உள்ளது.

நாற்சதுர ஆவுடையாரில், சுக்ரீவரர் எழுந்தருளியுள்ளார். நான்கு கரங்களுடன், இரு பின்கரங்களில் மலர்களையும், முன் கரங்கள் அபயவரதமாக நின்ற கோலத்தில் ஆவுடை நாயகி காட்சி தருகிறாள்.

"மிளகு மூட்டைகளைப் பயிறு மூட்டை எனக் கூறிய வணிகன், சந்தைக்குச் சென்றதும் அத்தனையும் பயிராக மாறியிருக்கக் கண்டான். அவனிடம் மிளகு கேட்டவர், ஈசன் தான் என்று அவன் அறியவில்லை". "மிளகீசன்" என்று திருநாமம், இந்த தலபுராணத்தில் மூலம் ஏற்பட்டது.

"வடுகப் பிள்ளையார்" என்ற விநாயகர் சந்நிதியுடன், நான்கு கரங்கள் கொண்டு ஒரே முகம் உள்ள முருகப் பெருமானையும் தரிசிக்கலாம். மண்டபத்தில் இரண்டு நந்திகள் உள்ளன. வெளிச்சுற்றில் மூன்று லிங்கங்கள் "பிருத்வி – அப்பு





–தேயு” ஆகியன உள்ளன. கோயிலின் வடபுறம் ஒரு சிறிய குளம் உள்ளது.

பூர்வபட்டயம் கரிகாலச்சோழன் 36 பெரிய சிவாலயங்களையும் கட்டினான் என்று வரலாறு கூறுகிறது. அப்படி அமைத்ததில் ஒன்று தான் வானவர்கோன் வழிபாடு செய்த சுக்ரீசுவரர் கோயில். பவானி ஆற்றின் குறுக்கே கொடிவேரி அணையைக்கட்டிய மைசூர் மன்னர் நஞ்சராஜ உடையார், (1446 - 1500) இந்த கோயிலுக்கு 400 ஏக்கர் நிலங்களை மானியமாக அளித்து, ஒரு குளமும் பாசனத்திற்காக அமைத்தார். அந்தக் குளம் “நஞ்சராஜா குளம்” என்று அழைக்கப்படுகிறது.

உத்தராயணமும், தட்சிணாயனமும் சந்திக்கும் நாளில், சூரியனின் ஒளிக்கதிர்கள், நேராக கருவறையில் உள்ள சுக்ரீசுவரர் மீது படிவது, குறிப்பிடத்தக்கது. “கொம்பிற் குறும்பிற் குரக்குத் தளியாய்...” என்ற பாசுரம் கூறுகிறது.

நாள்தோறும் ஒரு கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 04259 – 273507





## அருள்மிகு
## முத்துக்குமாரசுவாமி திருக்கோயில்
### அலகுமலை

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு முத்துகுமாரபாலதண்டாயுதபாணி |
| இறைவி | அருள்மிகு வள்ளி - தெய்வானை |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | காரணாகமம் |

திருப்பூர் மாவட்டம், பல்லடத்திற்கு கிழக்கே 21 கி.மீ. தொலைவில் உள்ளது அலகுமலை. அலகு என்றால் அகன்று உயர்ந்த மலை என்று பொருள். ஒரு பறவையில் அலகு கழுத்து போல இந்த மலை நீண்டுள்ளதால் அலகுமலை என்று அழைக்கப்படுகிறது. இதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளுக்கு “வலுப்பூர் நாடு” என்று பெயர்.

அலகு மலைக்கு நான்கு திசைகளிலும் மலைகள் உள்ளன. வடக்கே கதித்த மலை, தெற்கே வட்டமலை, கிழக்கே சென்னிமலை, மேற்கே மருதமலை என்று எங்கு நோக்கினும் மலைகளே.



சோழமன்னன் ஒருவர் தனது மகள் வலிப்பு நோயினால் அவதியுற்றபோது, அவனை தில்லை நடராசப்பெருமானை தரிசனம் செய்யுமாறு சான்றோர்கள் கூறினார்கள். சிதம்பரத்திற்குப் புறப்பட்ட அந்த அரசனின் கனவில் “எனது பக்தன் ‘வெட்கோவன்’ கத்தாங்கண்ணியில் பூசாரியாக உள்ளான். அவனால் உனது மகளின் வலிப்பு நோய் தீரும் ” என்று குல தெய்வம் அசரீரியாக கூறியது.

மன்னனின் ஆணைப்படி பூசாரி வரவழைக்கப் பட்டான். காளியின் அருள் பெற்றவன் அவன். தனக்கும் அரசகுமாரிக்குமிடையே திரையிட்டு, விளக்கேற்றி, மணலைப் பரப்பினான். வலிப்பு நோய் உள்ள பாகங்களை மணலில் வரைந்து, இரும்புக் கம்பிகளில் சூடேற்றி அவற்றின் மீது முப்பதிரெண்டு முறை சூடு போட்டான். அரச குமாரி குணமடைந்தாள். அவளது நோயைத் தீர்த்தவளே வலுப்பூரம்மன். “வானவன் சேரி” உள்பட ஆறு கிராமங்களை பூசாரிக்கு மானியமாக அளித்தான் அரசன். இதனை “வெட்கோவர் சமூக செப்பேடு” புகழ்ந்துரைக்கிறது.

வானவர் வாழும் இடம் என்பதால் வானவன் சேரி என்று பெயர் வந்தது. இங்கு தான் அலகுமலை உள்ளது. கிழக்கு நோக்கிய மலைக்கு 300 படிகளும், மலைப்பாதையும் உள்ளன. மலைமீது கைலாச நாதர் உள்ளது.



ஆனால்பாலதண்டாயுதபாணிக்கு தான் அத்தனை சிறப்புகளும் 900 ஆண்டுகள் பழமையான ஆலயம் இது.

மலைக்கோயிலுக்கு செல்லும் நுழைவாயிலில் மயில் மண்டபம் உள்ளது. பாதவிநாயகரை வழிபட்டபின், அழகிய மண்டபத்தை காணலாம். முருகனின் ஆறுபடை வீடுகளும் அங்கே அழகுற அமைக்கப்பட்டுள்ளன. அதன் பிறகு விநாயகர், நவகிரகங்கள், ஆஞ்சநேயர் சந்நிதிகள் உள்ளன. மகாமண்டபத்தின் வலப்புறம் ஆனந்த விநாயகரும், இடப்புறம் வீரபாகு தேவரும், வடபுறம் தனிசந்நிதியில் வள்ளி, தெய்வானை சந்நிதிகள். கருவறையில் நாடுவோருக்கு நலம் தரும் நாயகனாக சிறுகுழந்தை வடிவில், அரன்மாதா மைந்தன், அலகுமலை அழகனாக காட்சி தருகிறார். பாரிஜாத மாலையும், கதம்ப மாலையும் அவருக்கு சிறப்பு சேர்க்கின்றன.

அழகு மலைக்கு அருகில் தனியாக வலுப்பூரம்மன் திருக்கோயில் உள்ளது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகின்றன.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி – இரவு 7.00 மணி

தொலைபேசி 04259 – 273507

# அன்னதானம்

"உண்டி கொடுத்தார் உயிர் கொடுத்தார்" – திருமூலர்

'தானத்தில் சிறந்தது அன்னதானமே' என்று மறைநூல்கள் கூறுகின்றன. மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதான திட்டத்தின்கீழ் பலத் திருக்கோயில்களில் தினமும் பக்தர்களுக்கு மதிய உணவு வழங்கப்பட்டு வருகிறது.

இந்து சமய அறநிலையத்துறையின் கோவை, மண்டலத்தின் கீழ் கோவை, நீலகிரி, திருப்பூர் மற்றும் ஈரோடு ஆகிய மாவட்டங்களில் தற்போது மொத்தம் 50 திருக்கோயில்களில் அன்னதானத்திட்டம் அறிவிக்கப்பட்டு சிறந்த முறையில் செயல்பட்டு வருகிறது.

இந்த சிறப்புமிக்க அன்னதானத்திட்டத்தில் பக்தர்கள் முதலீடு செய்து அதிலிருந்து கிடைக்கும் வட்டிமூலம் ஆண்டில் ஒரு நாளைக்கு தாங்கள் விரும்பும் நாளில் தங்களது பெயரில் பக்தர்களுக்கு அன்னதானம் செய்து நற்பலனை அடையலாம். இத்திட்டத்திற்கு இந்திய அரசின் வருமான வரிச்சட்டம் 80/G ன் கீழ் வருமான வரிவிலக்கும் அளிக்கப்படுகிறது.

எனவே, பக்தர்கள் இந்த சிறப்புமிக்க அன்னதானத் திட்டத்தில் முதலீடு செய்து தாங்களும் அன்னதானத்தில் பங்கேற்கலாம். தங்களின் குடும்பத்தினரின் பிறந்தநாள், மணநாள், நீத்தார் நினைவு நாள் போன்ற நாட்களில் திருக்கோயிலில் அதற்கென ஒரு நாள் கட்டணத்தை செலுத்தி 100 அல்லது 50 பக்தர்களுக்கு மதிய உணவை அன்னதானமாக வழங்கி இறையருள் பெறுவீர்.



## அருள்மிகு
## காடைஈசுவரர் திருக்கோயில்
### காடையூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு காடைஈசுவரர் |
| இறைவி | அருள்மிகு பங்கஜாட்சியம்மன் |
| தல விருட்சம் | வெடத்தலா மரம் |
| ஆகமம் | காமியா ஆகமம் |

திருப்பூர் மாவட்டம், காங்கேயத்திற்கு தென்மேற்கில் பல்லடம் செல்லும் சாலையில் 7 கி.மீ. தொலைவில் உள்ளது. பொதியபாளையம் என்றும் அழைத்திடுவர்.

கொங்கு வேளாள காணியாளர்களில் “பொருள் தந்த குலம்” என்று அழைக்கப்படுவர், பூந்துறை நாட்டிலிருந்து கால் நடைகளோடு, காங்கயே நாட்டுக் காடையூர் வந்த காங்கேயம் மரபினரே ஆவர்.

முத்தூர் செப்புப் பட்டயம், இவர்களது பெருமைகளைப் பறை சாற்றுகிறது.

மூன்று நிலை இராஜகோபுரமும், மகாமண்டபம் மற்றும் திருச்சுற்றையும் கொண்ட அழகிய கோயில், கொங்கு நாட்டிற்கே உரித்தான கருங்கல் தீபத்தம்பம், திருக்கோயிலின் முன்னே உள்ளது.



காடையூரர், வழிபாட்டுத் தெய்வமாக, ஈசுவரனுக்கு கோயில் எழுப்பி "காடைஈசுவரர்" என்ற திருநாமத்துடன் எழுந்தருளச் செய்துள்ளனர். அன்னை "கமலக் கண்ணி" பங்கஜாட்சியம்மன் என்று வடமொழியில் அழைக்கப்படுகிறாள்.

வடநாட்டு அரசன் ஒருவன் படையெடுத்து வரும்போது காங்கேய நாட்டுப் படையினருக்கு, ஈசுவரனே உதவிட முன் வந்தாராம். "காடை குருவி" உருவெடுத்து, அன்னியரின் யானைப் படையை அழித்து உதவியதால், காடையூர் என்றும், "காடைஈசுவரர்" என்றும் பெயர் வந்ததாகவும் தலவரலாறு கூறுகிறது.

தானே முளைத்தெழுந்தத் திருமேனியாக காடைஈசுவரர் அருள்பலிக்கிறார். காடையூர்வாசன், காடைபுரி ஈசன், காடைலிங்கேசன், காடைலிங்கர், பங்கசாட்சி நேயன் என்றும் தனிப்பாடல்களில் பெயர்கள் அமைந்துள்ளன.

மகா மண்டபத்தில் தெற்குமுகமாக சபாநாயகர் சந்நிதி அமைந்துள்ளது. தாமரைக்கண்ணியாள், பங்கையர் செல்வி, பாண்டிய குமாரி என்றும் அழைக்கப்படும் அன்னை "பங்கஜாட்சி" என்று திருநாமங்கொண்டுள்ளாள்.

காடையூருக்கு பழம்பெயர் 'நட்டூர்' என்பதாகும். சிவ பெருமான் இத்தலத்தில் நட்டுவாங்கம் முழங்கிட திருநடனம் ஆடியதால், நட்டூர் என்று அழைக்கப்பட்டதாம்.

சுப்பிரமணியர் சந்நிதியும், பங்கஜாட்சியம்மன் சந்நிதியும் கிழக்கு நோக்கியுள்ளன.

கருணாகரப் பெருமாள்

காடைஈசுவரர் திருக்கோயிலின் திருச்சுற்றிலேயே பெருமாள் சந்நிதியும் அமைந்துள்ளது. சீதேவி, பூதேவியோடு கருணாகரப் பெருமாள் எழுந்தருளியுள்ளார்.

ராமானுஜர், நம்மாழ்வார், லட்சுமிநாராயணர் சந்நிதிகளும் உள்ளன. 'வீர ஆஞ்சநேயர்'மற்றும் 'அஞ்சலி ஆஞ்சநேயர்' என்று இரண்டு சந்நிதிகள் அமைந்துள்ளன.

வெள்ளையம்மன் கோயில்

காடைஈசுவரர் கோயிலின் திருச்சுற்றில், மேற்கு நோக்கி, தலமரத்தின் அடியில் வெண்மைகல்லினால் ஆன அழகுத் திருமேனியுடன் 'வெள்ளையம்மன் திருக்கோயில்' அமைந்துள்ளது.சித்திரை மாதம், திருத்தேர் விழா 10 நாட்கள் சிறப்பாக நடைபெறுகிறது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி - பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி - இரவு 8.00 மணி

தொலைபேசி : 04257 - 247245





## அருள்மிகு
## சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்
### சிவன்மலை

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சுப்ரமணியசுவாமி |
| இறைவி | அருள்மிகு வள்ளியம்மன் |
| தல விருட்சம் | தொரட்டி மரம் |
| ஆகமம் | காரணாகமம் |

கொங்கு மண்டலத்தின் மையப் பகுதியான காங்கேயத்திற்கு அருகில் 4 கி.மீ. தொலைவில், திருப்பூர் செல்லும் சாலையில் அமைந்த திருத்தலம். 18 சித்தர்களில் ஒருவரான சிவவாக்கியச் சித்தர் வழிபட்ட திருத்தலம்.

கடல் மட்டத்திலிருந்து 400 அடிகள் உயரத்தில், மலை மீது அமைந்த திருக்கோயில் 496 படிகளைக் கொண்டுள்ளது. படிகள் வழியாகவும் மலைப்பாதை வழியாகவும் திருக்கோயிலைச் சென்றடையலாம். கிழக்கு திசை நோக்கி அமைந்த திருக்கோயில், சங்க காலத்தில் சமய கேந்திரமாக மட்டுமன்றி வணிக கேந்திரமாகவும் இருந்தது. கிரேக்கர்களும், யவனர்களும் இங்கு வணிகம் செய்துள்ளனர்.






சிவன்மலை, சேய்மலை, சேமலை, பட்டாலியூர் என்று வேறு பெயர்களும் கொண்டது. முப்புரம் எரித்திட்ட சிவபெருமான் இமயமலையை வில்லாக வளைத்தபோது அதிலிருந்து சிதறி விழுந்த துண்டு தான் சிவன்மலையானது என்பர். சஞ்சீவிமலையை ஹனுமான் எடுத்து வருகையில் அதன் துண்டு கீழே விழுந்ததாகவும், அதுவே சிவன்மலை என்றும் கூறுவர். அதற்கு ஆதாரமாக மலையடிவாரத்தில் உள்ள அனுமன் கோயிலைச் சுட்டிக்காட்டுவர்.

இத்திருத்தலத்தைப் பற்றி சிவன்மலை புராணம், சிவன்மலைக் குறவஞ்சி திருப்புகழ், திருமுருகாற்றுப்படை, மயில்விடுதூது ஆகியவற்றில் கூறப்பட்டுள்ளது. இராமாயண காலத்திற்கும் முற்பட்டதாகவும் கூறுவர். 11ம் நூற்றாண்டில் கொங்குச் சோழர்களால் இக்கோயில் விரிவாக்கப்பட்டது. 16 நூற்றாண்டில் அருணகிரிநாதர் இத்தலத்து முருகப் பெருமானைப் பற்றி மூன்று பாடல்கள் பாடியுள்ளார்.

**'மயில்வாகனர்'**

இடப்புறம் மயில்வாகனத்துடன் வள்ளியுடன் சுப்ரமணியசுவாமி கருவறையில் காட்சி தருகிறார். சிவன்மலைக் காங்கேயன், சிவாச்சல வேந்தன், சிவாத்ரிநாதன், சிவசுப்ரமணியன், காங்கேயன், மரகதமயூரன் என்றும் முருகப்பெருமான் அழைக்கப்படுகிறார்.



மகிமைசேர்சிவமலை, தவசபுரி சிவன்மலை , சக்தி சிவன்மலை எனப் பல்வேறு பெயர்கள் இத்திருத்தலத்திற்கு உள்ளன.

முருகப்பெருமான் திருக்கல்யாணக் கோலத்தில் வள்ளியம்மையுடன் கிழக்குதிசை நோக்கியபடி தரிசனம் தருகிறார். முருகப்பெருமானின் மயில் கிழக்குதிசை நோக்கியுள்ளது. இந்திரனே மயிலாக உள்ளார் என்றும் கூறப்படுகிறது. வள்ளியைக் கவர்ந்து வந்த முருகப் பெருமானைப் பின்தொடர்ந்து வந்த வேடர்களைப் போரில் முருகன் மாய்த்தார். வள்ளியின் வேண்டுகோளுக்கிணங்க அவர்களை மீண்டும் உயிர்ப்பித்தார். எனவே இத்தலத்தை பட்டாலியூர் எனறும் அழைப்பர்.

மலையடிவாரத்தில் நஞ்சுண்டேஸ்வரர் சந்நிதி உள்ளது. அவரை தரிசித்த பின்னர் மலையேற வேண்டும். அடுத்து வருவது பாலவிநாயகர் சந்நிதி. பிறகு 18ம் படியில் சக்தி பீடம், அதனை அடுத்து இடும்பன் சந்நிதி. திருக்கோயில் நுழைவாயிலில் உச்சி விநாயகர் தனி சந்நிதி கொண்டுள்ளார். அடுத்து வெளிச்சுற்றில் சிவசூரியனும் அவருக்கு எதிரே புளியமரத்தடி விநாயகர், அடுத்து கிழக்கு நோக்கிய திசையில் ஞானாம்பிகை, கைலாயநாதர் சந்நிதிகள். சிவன்மலையில் இரண்டு சண்டிகேசுவரர்களை தரிசிக்கலாம். சிவசண்டிகேசுவரர், குகசண்டிகேசுவரர்.

சிவன்மலையில் தட்சிணாமூர்த்தி, குகனின் ஆயுதங்கள் அனைத்தும் கொண்டுள்ளார். மேற்கரங்களில் வேலும் சக்தி ஆயுதமும் தாங்கிய அவர் **'குகதட்சிணாமூர்த்தி'**

என்றழைக்கப்படுகிறார். திருச்சுற்றில் கன்னிமூலை கணபதி, தண்டாயுதபாணி, துர்கை, குகசண்டிகேசுவரர் சந்நிதிகள் உள்ளன. தண்டாயுதபாணி சந்நிதி எதிரில் தலமரமான 'தொரட்டிமரம்' உள்ளது மரத்தடியில்நவகன்னியர் சந்நிதி உள்ளது.

நவக்கிரங்கள் சந்நிதியில் சூரியனைப் பார்த்தபடி எட்டு கிரகங்கள் உள்ளதோடு சனீஸ்வரருக்கு கிழக்கு நோக்கியபடி தனிசந்நிதியும் உள்ளது. மகாமண்டபத்தில் ஜுரகேசுவரர், ஜுரலோகநாயகி சிலைகள் உள்ளன. இடதுபுறம் வள்ளி தேவயானையுடன் முருகன் உற்சவ மூர்த்தியாக உள்ளார். அர்த்த மண்டபத்தில் கணபதியும் கருவறையில் மூலவர் முருகனுக்கு வலப்புறம் வள்ளியின் சிலையும் அவருக்கு முன்னே சிவலிங்கமும் உள்ளன.

தைப்பூசத்தேர்த்திருவிழா, கந்தசஷ்டி, சூரசம்ஹாரம், கார்த்திகை தீபம் ஆகியவை முக்கிய திருவிழாக்கள் ஆகும். தைப்பூசத் திருவிழா ஆறுபடை திருவிழாவாகவும் கொண்டாடப் படுகிறது. இலட்சக் கணக்கில் பக்தர்கள் இங்கு கூடுவர்.

பூக்கேட்டல்

'பூக்கேட்டல்' சிவன்மலையில் முக்கியமான பிரார்த்தனை ஆகும். எந்தக் காரியத்தை மேற்கொண்டாலும், சிவன்மலை முருகன் பாதத்தில் பூ வைத்து முருகவனருள் வேண்டியே அதனைத் துவங்குவர்.

அன்னதானம்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப் பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

நாள்தோறும் நான்கு கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 – இரவு 8.00 மணி தொலைபேசி: 04257 – 220630

மின்னஞ்சல்: sivanmalaikovil@sancharnet.in

இணையதளம்: sivanmalaimurugan.org.



## அருள்மிகு
## மத்தியபுரீஸ்வரர் திருக்கோயில்
### பரஞ்சேர்வழி

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு மத்தியபுரீஸ்வரர் |
| இறைவி | அருள்மிகு சுகந்த குந்தலாம்பிகை |
| தல விருட்சம் | வள்ளி மரம் |
| ஆகமம் | காமீகம் |

திருப்பூர் மாவட்டம், காங்கயம் – சென்னிமலை சாலையில் உள்ள நால்ரோட்டிற்கும், கிழக்கே நத்தக்காடையூர் சாலையில் 3 கி.மீ. தொலைவிலும் காங்கேயத்திலிருந்து வடக்கே 9 கி.மீ. தொலைவிலும் இத்திருத்தலத்தை சென்று அடையலாம்.

காங்கேய நாட்டு பதினான்கு ஊர்களின் வரிசையில் ஏழாவது இடத்தைப் பெறுவது பரஞ்சேர்வழி. நட்டூர், பரன்பள்ளி, பனைசேர்பள்ளி, புகழ்பரஞ்சை, பரஞ்சை நகர் என்று இலக்கியங்களில் கூறப்படுவது நட்டூர் என்பதே பழைய பெயராகும். 1000 ஆண்டுகளுக்கு முற்பட்ட திருக்கோயில், கல்வெட்டுக்களில் 'நட்டூரமர்ந்த நாயனார், நட்டூரமர்ந்தார்' என்று கூறப்படுகிறது. பள்ளி என்றழைக்கப்படுவது இங்கே சமணர் பள்ளி இருந்ததைக் குறிப்பிடுகிறது. ஒரு கி.மீ. தொலைவிலுள்ள கரியகாளியம்மன் கோயில் செல்லும் பாதையில் சமணர் தீர்த்தங்கரர் சிலை ஒன்றும் காணமுடிகிறது.



பரஞ்சேர்வழி' யின் வடதிசையில் நொய்யலாறு பாய்கிறது. திருக்கோயிலுக்கு முன்னே, கொங்கு நாட்டிற்கே உரித்தான, கருங்கல் தீபத்தம்பம், நான்குகால் மண்டபத்துடன் உள்ளது. இராஜகோபுரம் இல்லை. முகப்பு வாயிலைக் கடந்து உள்ளே சென்றால் திருச்சுற்றின் மேற்குப்பகுதியில் கொங்கு வேளாள இனத்தவர், ஆறு குலத்தவர் தத்தம் குலத்திற்கு ஒரு விநாயகரை பிரதிஷ்டை செய்துள்ளனர்.

கருவறையில் சுயம்புவாக, சதுர ஆவுடையாரில், நட்டூர்நாதர் எழுந்தருளியுள்ளார். வெளியே நந்தி, நீர் கட்டும் அமைப்புடன் உள்ளது. மத்யபுரீசுவரரை வணங்கி வெளியே வந்து, தேவகொஷ்டங்களில் தென்புறம் நர்த்தன கணபதியையும், தட்சிணாமூர்த்தியையும் காண்கிறோம். வடபுறம் நான்முகன், சண்டிகேசுவரர்.

தனிசந்நிதியாக நட்டுவார் குழலியம்மை, நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். நாள்தோறும் 3 காலவழிபாடு நடைபெறுகின்றன. நவராத்திரி, திருவாதிரை, கார்த்திகை தீபம், சிறப்புவழிாபடு நடைபெறும்.

"சிராப்பள்ளி சிவப்பள்ளி செம்பொன் பள்ளி
செழுநனிபள்ளி, தவப்பள்ளி சீரார்
பரப்பள்ளி என்று பகர்வோர் எல்லாம்
பரலோகத்து இனிதாகப் பாலிப்பாரே" – திருத்தாண்டகம்

**தொலைபேசி: 04257 – 243385.**





## அருள்மிகு
## வீரநாராயணப் பெருமாள் திருக்கோயில்
### பரஞ்சேர்வழி

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வீரநாராயணப்பெருமாள் |
| இறைவி | அருள்மிகு ஸ்ரீதேவி - பூதேவி |
| தல விருட்சம் | வன்னி மரம் |
| ஆகமம் | காமீக ஆகமம் |

நட்டூர்நாதர் திருக்கோயிலை யொட்டியே, தென்பகுதியில் கிழக்கு நோக்கியபடி பெருமாள்கோயில் உள்ளது. வீரநாராயணப்பெருமாள் என்ற திருநாமத்துடன் ஸ்ரீதேவி, பூதேவியுடன் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். வேறு சந்நிதிகள் இல்லை.

திருக்கோயிலுக்கு வெளியே, பெருமாள் கோயிலின் எதிரே தனியாக கருடத்தம்பம் உள்ளது. வெளிச்சுற்றின் வடமேற்கு மூலையில் 'கல்வெட்டு' ஒன்று குத்துக்கல் மீது காணப்படுகிறது. 'ராஜாதிராஜன் வீரநாராயண வீரசோழ' என்ற கொங்குச் சோழ அரசனின் கல்வெட்டு இங்கு உள்ளது. நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 04257 - 243385



## அருள்மிகு
## கரியகாளியம்மன் திருக்கோயில்
### பரஞ்சேர்வழி

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கரியகாளியம்மன் |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | காரணாகமம் |

கொங்குநாட்டுக் காணியாளர்களில் பயிர குலத்தவரின் கண்கண்ட தெய்வமாக விளங்குபவள் பரஞ்சேர்வழியில் எழுந்தருளியுள்ள கரியகாளியம்மன். பூந்துறை நாட்டிற்கும் காங்கேய நாட்டிற்கும் எல்லைத் தகராறு முற்றிப்போய், போராக மூண்டபோது, பயிர குலத்தவரே முன்னின்று தலைமை தாங்கி காங்கேய நாட்டின் எல்லையைக் காத்தனர் என்று, டாக்டர் உ.வே.சாமிநாதய்யரின் ஆய்வுகளில் தெரியவந்துள்ளது.

ஐந்துநிலை இராஜகோபுரத்துடன் கூடிய அழகிய திருக்கோயில் கருவறை அந்தராளம், முகமண்டபம், ஆகியவை சிற்ப சாஸ்திரப்படி அமைந்துள்ளன. கருவறை விமானம் மூன்று நிலைகொண்டதாக 24 அடி உயரம் கொண்டது.



கருவறையின் உள்ளே வடவாயிற் செல்வியாக மிகத்தொன்மையான சிற்ப வடிவில் அன்னை கரியகாளியம்மன் எட்டுக்கரங்களுடன் வீற்றிருக்கிறாள். முன்கையில் சூலம் தாங்கி வலது மேற்கரத்தில் சங்கும் இடக்கரத்தில் கத்தியும் கீழ்க்கரத்தில் வில்லும் கொண்டுள்ளாள். இடது மேல்கரத்தில் சக்கரமும் இடக்கையில் கேடயமும் கீழிரண்டு கரங்களில் அம்பும் கபாலமும் ஏந்தியபடி குத்துக்காலிட்டு அமர்ந்தபடி அன்னை காட்சி தருகிறாள். அசுரனின் மார்பில் இடது பாதத்தை அழுத்திய கோலம்.

ஆறு காணியாளர்களும், தங்கள் குலத்தவரின் காணிக்கையாக கரியகாளியம்மன் கோயிலில் பிரமிப்பூட்டும் 6 குதிரைகளை அமைத்துள்ளனர். அவற்றுள் மூன்று செம்பினாலானது என்பதும் குறிப்பிடத்தக்கது. சுதை சிற்பமான குதிரைமீது கரியகாளியம்மன் எட்டுக் கரங்களுடன் குதிரை மீதமர்ந்த கோலத்தில் உள்ளது கண்ணைக் கவருவதாகும். திருச்சுற்றில் கன்னிமார், பேச்சியம்மன், துவாரசக்தி ஆகியவை அமைந்துள்ளன. சித்திரைக்கனி, நவராத்திரி, தைப்பொங்கல், கார்த்திகை சிறப்புத் திருவிழாக்களாகும்.

நாள்தோறும் நான்கு கால வழிபாடு நடைபெறுகிறது. அமாவாசை, பௌர்ணமி சிறப்பு வழிபாடுகள் மற்றும் ஒவ்வொரு நட்சத்திரங்களுக்கும் சிறப்பு அர்ச்சனை தமிழில் நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி முதல் இரவு 8.30 மணி வரை

தொலைபேசி: 04257 - 243385



## அருள்மிகு
## பிரசன்ன வெங்கடேசப்பெருமாள் திருக்கோயில்
### காங்கேயம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வெங்கட்ரமணசுவாமி |
| இறைவி | அருள்மிகு சீதேவி, பூதேவி |
| தீர்த்தம் | பெருமாள் தீர்த்தம் |
| தல விருட்சம் | எலந்த மரம் |
| ஆகமம் | பாஞ்சராத்ர ஆகமம் |

திருப்பூருக்கு தென்கிழக்கே 28 கி.மீ. தொலைவில் உள்ளது காங்கேயம். காங்கேயத்தில் ஒரு பெருமாள் கோயிலும், இரண்டு சிவாலயங்களும் உள்ளன. பேருந்து நிலையத்திற்கு மிக அருகில், பிரதான சாலையை விட்டு உள்ளடங்கி அமைந்துள்ளது பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் திருக்கோயில்.

திருப்பதியைப் போலவே, வெங்கடேசப் பெருமாள், தனி சந்நிதி கொண்டு சேவை சாதிக்கிறார். நின்ற திருக்கோலம். அலர்மேல் மங்கைத் தாயார் தனிச்சந்நிதி கொண்டுள்ளார். சக்கரத்தாழ்வார், ஆண்டாள், ஆஞ்சநேயர், கருடாழ்வார் சந்நிதிகள் உள்ளன. பாஞ்சராத்ர ஆகமப்படி மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி.



## அருள்மிகு
## காசிவிசுவநாதர் திருக்கோயில்
### காங்கேயம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு காசிவிசுவநாதசுவாமி |
| இறைவி | அருள்மிகு விசாலாட்சியம்மன் |
| தல விருட்சம் | வன்னி மரம் |
| ஆகமம் | காரண ஆகமம் |

திருக்கோயில் பேருந்து நிலையத்திற்கு தென்கிழக்கே கரூர் சாலையை யொட்டி அமைந்துள்ள பழமையான திருக்கோயில், மூன்று நிலை இராஜகோபுரம் உள்சுற்றும் கொண்ட சிறிய கோயில். நுழைவாயில் எதிரில் கருங்கல் தீபத்தம்பம் உள்ளது. கருவறையில், தானே முளைத்த திருமேனியாக காசி விசுவநாதர், சதுரமான பீடத்தில் எழுந்தருளியுள்ளார். இடப்புறம் விசாலாட்சி தனிச்சந்நிதி கொண்டுள்ளார்.

பரிவார தேவதைகள், விநாயகர், முருகப்பெருமான், நவக்கிரக சந்நிதிகள் உள்ளன.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி




## அருள்மிகு
## முத்துக்குமாரசுவாமி திருக்கோயில்
### வட்டமலை

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு முத்துக்குமாரசுவாமி |
| இறைவி | அருள்மிகு வள்ளி, தெய்வானை |
| ஆகமம் | காமிகா ஆகமம் |

திருப்பூர் மாவட்டம், காங்கேயம் நகருக்கு தெற்கு, தாராபுரம் சாலையில், 7 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. 200 படிகள் உள்ளன. வாகனங்கள் சென்று வர மலைப்பாதையும் உள்ளது.

வட்டமலைக்கு வடக்கே காங்கேயமும், தெற்கே ஊதியூர் கிராமமும், மேற்கில் குங்கார்பாளையமும், கிழக்கில் சங்கராண்டாம்பாளையமும் அமைந்துள்ளது. சுற்றிலும் அழகிய தோப்புகளும், வயல்வெளிகளும், மேற்கில் சிறு அம்பக நதியும் உள்ளன.

கொங்கண சித்தரால் பூசிக்கப்பட்டதாக கருதப்படுகிறது வட்டமலை. அருணகிரிநாதரின் திருப்புகழ் கொண்ட தலம். சேரமன்னர்களால் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்டதாக கூறுவர்.

அடிவாரத்தில் பாதவிநாயகர் சந்நிதியும், படிப்பாதை



நடுவில் வேம்பட விநாயகர் சந்நிதியும் உள்ளன. மலைக் கோயிலின் சுற்றுப் பிரகாரத்தில் இடும்பன் சந்நிதி, விநாயகர் சந்நிதி, பலிபீடம், மயில் மண்டபம் அமைந்துள்ளன. வீரபத்திரர், நவகிரகங்கள், துர்க்கையம்மன் சந்நிதிகளும் உள்ளன. கருவறையில் அருள்மிகு முத்துகுமார சுவாமி, மேற்கு திசையை நோக்கி நின்ற கோலத்தில் அருள் பாலிக்கிறார். அர்த்தமண்டபத்தில், சுமுகன், சுதேகன் என்னும் துவாரபாலகர்களும் நவவீரர்களும் இடம் பெற்றுள்ளனர்.

காடைஈசுவரர், பங்கயற்செல்வி சந்நிதிகளும் அர்த்த மண்டபத்தில் உள்ளன. வாத்திய மண்டபத்தில், அழகிய சிலைகளும், சிற்பக்கலை நுணுக்கம் கொண்ட தூண்களும் உள்ளன. ஓரிரு தூண்களில் கொங்கணச் சித்தர் புடைப்பு சிற்பமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளார். உற்சவர் திருமேனி வள்ளி தெய்வானையுடன் கூடிய முத்துக்குமார நாக சுப்ரமணியர் ஆவார். கார்த்திகை தீபம், கந்தசஷ்டி மற்றும் பங்குனிமாதத்தில் பங்குனி உத்திரத் திருவிழா சிறப்பாக நடைபெறுகிறது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 7.00 - 12.00 மணி, மாலை 5.00 - 8.00 மணி





## அருள்மிகு
## உத்தண்டவேலாயுத சுவாமி திருக்கோயில்
### ஊதியூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு உத்தண்டவேலாயுதசுவாமி |
| இறைவி | அருள்மிகு வள்ளி, தெய்வானை |
| ஆகமம் | சிவாகமம் |

ஊதியூர் மலை காங்கேயத்திற்கு தெற்கே தாராபுரம் சாலையில் 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. சுமார் 15 கி.மீ. சுற்றளவு கொண்டதாகும்.

அடிவாரத்தில் உத்தண்ட வேலாயுத சுவாமி திருக்கோயிலும் மலை மீது 'கொங்கண சித்தர்' கோயிலும் உள்ளன. இளையான் கவிராயர் இயற்றிய அப்பிரமேசுவரர் தல புராணம், கொங்கணச் சருக்கத்தில், ஊதியூர் மலையைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

கொங்கணசித்தர் வாழ்ந்திருந்ததால் கொங்கணகிரி என்றும், ரசவாதம் செய்து ஊதி 'பொன்' தயாரித்ததால், 'பொன்னூதி மலை' என்று அழைக்கப்பட்டு காலப்போக்கில் ஊதியூர் என்ற பெயரே நிலைத்துவிட்டதாக கூறுவர். கொங்கு வேளாளரின் போர்ப்பட்டறையாகவும் ஊதியூர் இருந்ததாம்.

சஞ்சீவி மலையை அனுமன் எடுத்துச் சென்ற போது, அதன் ஒரு பகுதி, இப்பகுதியில் சிதறி விழுந்ததால், சஞ்சீவி




மலை என்றும் அதற்கு ஆதாரமாக மலையில் வளரும் அபூர்வமான மூலிகைகளை கூறுவர்.

மலையின் இடைப்பகுதியில் அமைந்துள்ளது உத்தண்ட வேலாயுதசுவாமி திருக்கோயில், பாதவிநாயகர், மயில் மண்டபம் ஆகியன ஆகமவிதிகளின்படியே அமைய பெற்றுள்ளன. வழியில் வடபுறம் இடும்பன் கோயில் உள்ளது. தென்புறம் அனுமந்தராயன் கோயிலும், அதனைக் கடந்து சென்றதால் தீபத்தம்பமும் உள்ளன.

கிழக்கு திசை நோக்கியபடி அமைந்துள்ள கோயிலில் கருவறை அர்த்தமண்டபம், மகாமண்டபம், வாத்தியமண்டபம் ஆகியன உள்ளன. நின்ற கோலத்தில் வேலாயுதசுவாமி அருள்பாலிக்கிறார்.

மகாமண்டபத்தின் தூண்களில் மயில்வாகனர், இடும்பன், காமதேனு, திருமால், மார்க்கண்டேயர், வேலாயுதசுவாமி, ராமலட்சுமணர், அவிநாசி திருத்தல வரலாறு ஆகியன அழகுமிகு சிற்பங்கள் உள்ளன. அருணகிரிநாதரின் ‘'திருப்புகழ்’ கொண்டது.

கொங்கண சித்தர் குகை

வேலாயுதசுவாமி திருக்கோயிலிருந்து கரடுமுரடான பாதையில், 2 கி.மீ. தொலைவு நடந்தால் கொங்கண சித்தர் கோயிலையும், அதற்கு மேலே அவர் தவமிருந்த குகையையும் காணலாம். பல சுனைகளும் உள்ளன.

கைலாசநாதர் கோயில்

ஊதியூர் மலையின் அடிவாரத்தில் கைலாசநாதர் திருக்கோயிலும் உள்ளது. கார்த்திகை தீபம், கந்தசஷ்டி, பங்குனி உத்திரம் சிறப்புத் திருவிழாக்கள் நடைபெறுகின்றன.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 5.00 மணி – இரவு 8.00 மணி

1000 சிறு தூண்கள்

ஆயிரம் சிவலிங்கங்களைத் தன்னுள் கொண்ட சகஸ்ரலிங்கத் திருமேனியாகக் காண்கிறோம். இதனைப் போலவே ஆயிரம் சிறு தூண்களைத் தன்னுள் கொண்ட பெருந்தூண் ஆவுடையார் கோயிலில் அம்மநாதசுவாமி ஆலயத்தில் உள்ளது.



## அருள்மிகு
## ஆருத்ரகபாலீசுவரர் திருக்கோயில்
### மடவிளாகம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு ஆருத்ரகபாலீஸ்வரர் |
| இறைவி | அருள்மிகு பிரகலநாயகி |
| தீர்த்தம் | நிஜபுக கரணி தீர்த்தம் |
| தல விருட்சம் | தொரட்டி மரம் |

திருப்பூர் மாவட்டம், காங்கேயத்திலிருந்து முத்தூர் செல்லும் சாலையில் சென்றால் 7 வது கி.மீட்டரில் பார்ப்பினியைச் சென்றடையலாம். பிரிந்து செல்லும் சாலையில் மடவிளாகம் என்று கேட்டு 1 கீ.மீ. பயணித்துத் திருக்கோயிலைக் காணலாம்.

பச்சையோடு ஈஸ்வரர் என்பதை பக்சோட ஈசுவரர் என்று முன் காலத்தில் அழைத்துள்ளனர். பல்வேறு தலங்களில் பசு, மயில் போன்ற உருவத்தோடு அன்னை ஈசனை நோக்கி தவம் இருந்ததாக புராணங்கள் கூறுகின்றன. மடவிளாகத்தில் அப்படி அன்னை தவம் இருந்த போது அடியார்களுக்கு

அன்னம் பாலிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

ஈசன் அன்னைக்கு திருவருள் கூட்டு முகமாக திருக்கரத்தில் பச்சை ஓட்டுடன் காட்சி தந்து அன்னை இடும் பிச்சையை ஏற்றுக் கொண்டு அருள்பாலிக்கிறார் என்று தலவரலாறு கூறுகிறது. ஈர ஓடு (ஈரோடு), சித்தோடு (சிறிய ஓடு) பேரோடு ( பெரியஓடு), வெள்ளோடு (வெள்ளை ஓடு) என்ற தொடரில் பார்வதிபுரம் என்றழைக்கப்பட்டு பார்ப்பதியாகி பார்ப்பிணியாகிவிட்ட தலத்தில் ஈசன் பச்சை ஓடைத்தாங்கி அருள் பாலிக்கிறார்.

நான்கு யுகங்களிலும் வெவ்வேறு திருநாமங்களைக் கொண்ட ஈசன் பிரம்மகபாலநாதர், கபாலீசுவரர், ஆருத்ர கபாலீசுவரர், என்றும் தற்போது பச்சோடு ஈஸ்வரர் என்றும் அழைக்கப்படுகிறார். அதேபோல அன்னையும் விசாலாட்சி, கமலவள்ளி, பிரகந்நாயகி பெரியநாயகி என அழைக்கப்படுகிறார்.

**'நகபுஷ்கரணி'**

மூலவர் கருவறைக்குப்பின்னே 'நகபுஷ்கரணி' உள்ளது. சர்வேஸ்வரன் தனது நகத்தால் கீறிய சுனையாம் இது பன்னிரண்டு ஆண்டுகளுக்கொரு முறை 'மண் கலயத்தில் திருநீறு' வெளிப்படுமாம். திருக்கழுக்குன்றத்தில் சங்கு தோன்றுவது போல.

சபாநாயகர் மண்டபத்தின் அருகில் தான்தோன்றீஸ்வரர் சந்நிதி உள்ளது. அருகிலேயே இரகுபதி நாராயணப் பெருமாள் ஆலயமும் உள்ளது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – இரவு 7.30 மணி



## அருள்மிகு
## சோழீசுவரர் திருக்கோயில்
### முத்தூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சோழீசுவரர் |
| இறைவி | அருள்மிகு பெரியநாயகி அம்மன் |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | காரண ஆகமம் |

காங்கேயத்திற்கு வட கிழக்கில், 14 கி.மீ. தொலைவில் நொய்யல் ஆற்றின் தென்கரையில் அமைந்த சிற்றூர் முத்தூர் ஆகும்.

கொங்கு வேளாளர்களில் முத்தன் குலத்தார் உருவாக்கியதால் முத்தூர் என்று பெயர் ஏற்பட்ட தெனக் கூறுவர். சிவனடியார் ஒருவர் நாள்தோறும் சோழீசுவரரை மலர்களால் அர்ச்சித்து வழிபட்டு வந்தார். ஒரு நாள், எங்கும் மலர்கள் கிடைக்காத நிலையில், தடாகம் ஒன்றின் கரையில் பெரிய முத்துமாலை ஒன்றும், நந்தவனம் அருகில் சிறிய முத்துமாலையும் கிடைக்கப் பெற்றார்.

வரலாற்றுச் சிறப்புடைய பெரியமுத்தூரில், ஊரின் நடுவே, கம்பீரமாக ஓங்கி உயர்ந்த ஐந்து நிலை கோபுரத்துடன் திகழ்கிறது சோழீசுவரர் திருக்கோயில்.

கல்வெட்டுக்களில், ‘‘முத்தூர் ஆளுடையார் குலோத்துங்க சோழீசுவரர்” என்றும் முத்தூர் பட்டயத்தில், “முத்தூர் குலோத்துங்க சோழீசுவரமுடைய தம்பிரானார்” என்றும் குறிப்புகள் உள்ளன.



கி.பி. 1148 முதல் 1183 வரை கொங்குநாட்டை ஆண்டுவந்த கொங்குச் சோழமன்னன் குலோத்துங்க சோழனால் விரிவாக்கம் செய்யப்பட்டதே முத்தூர் சிவாலயம். 11 கல்வெட்டுக்கள் அதன் பெருமையைப் பறைசாற்றுகின்றன.

அன்னை பெரிய நாச்சியார் என்று கல்வெட்டில் தூய தமிழில் வழங்கப்பட்டுள்ளது. கொங்குச் சோழமன்னரது காலத்தில், சோழீசுவரர் கோயிலில் வழிபாடு செய்வித்து வந்த ஆதிசைவ குலப் பெரியவரின் பெயர், “சிவப்பிராமணர் காசியப்ப கோத்திரத்தை சேர்ந்த பட்டன் உடையான் ஆன குலதீப பட்டன்” என்று கூறுகிறது.

திருக்கோயில் கருவறைக்குள் திருமஞ்சன நீர்குடமும், தருப்பையும் கொண்டு உள்புகும் உரிமை இவர்கட்கே உரியது என்றும் கூறப்பட்டுள்ளது.

நெடிய மதிலுடன் கூடிய திருச்சுற்றுடன் அமைந்துள்ளது திருக்கோயில். ‘சோழீசுவரர்’ நம் நூற்றாண்டில் ஆறுகால வழிபாட்டைப் பெற்றிருந்த சிறப்பையும் கல்வெட்டுக்கள் மூலம் அறிகிறோம்.

அன்னை ‘பெரிய நாயகி’ என்ற பெயரோடு தனிச்சந்நிதி கொண்டுள்ளாள். திருச்சுற்றில் பரிவார தேவதைகளும், நவக்கிரகங்களும் இடம் பெற்றுள்ளன.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி

சோழீசுவரர் திருக்கோயிலைத் தவிர, முத்தூரில் உள்ள மற்ற கோயில்கள் வருமாறு.

### செல்லாண்டியம்மன் திருக்கோயில்

சோழீசுவரர் திருக்கோயிலுக்கு வடகிழக்கில் உள்ளது. செல்லியம்மன், செல்லாயி, செல்வநாயகி என்றும் அழைப்பர். ‘சிம்மவாகினியான செல்லாண்டியம்மை’ என்று பாடல்கள் புகழ்கின்றன.

### அத்தனூரம்மன் திருக்கோயில்

அத்தனூரம்மன் முத்தூரின் காவல் தெய்வமாக விளங்குகிறாள். குப்பண்ணசுவாமி, மகாமுனி, பச்சமுனி, பவளமுனி ஆகியோரும், பேச்சியம்மன், மயிலம்மை முசலியம்மை ஆகியோரும் இடம் பெற்றுள்ளனர். குப்பண்ணரின் வாகனங்களாக காணிக்கையாளர்கள் செய்துள்ள குதிரைகள் உள்ளன.

### செல்வமுத்துக்குமார சுவாமி திருக்கோயில்

சின்ன முத்தூரில் உள்ள முருகன் கோயிலே, செல்வ முத்துக்குமாரசுவாமி கோயில் செஞ்சேரிமலை முருகனோடு இணைந்து, இதன் தலவரலாறு அமைந்துள்ளது.

### மாதவராயப்பெருமாள் திருக்கோயில்

தொட்டிய நாயக்கமன்னர் மாதவராயர் என்பவரால் அமைக்கப்பட்ட கோயில், பூமிதேவி, சீதேவியுடன் மாதவராயப் பெருமாள் எழுந்தருளியுள்ளார். மாதவராயன் கோட்டை ஒன்றும் இங்கே இருந்ததாம்.



## அருள்மிகு
## வீரக்குமாரசுவாமி திருக்கோயில்
### வெள்ளகோவில்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வீரக்குமாரசுவாமி |
| தல விருட்சம் | கருக்கட்டான் மரம் |

திருப்பூர் மாவட்டம், காங்கேயத்திலிருந்து திருச்சி சாலையில் கிழக்கே 19 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள தலம். காங்கேயம் நாட்டில் உள்ள பதினான்கு ஊர்களில் வெள்ளகோயிலும் ஒன்று.

சுமார் அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பு, கள்ளிச்செடிகளாலும் முட்புதர்களாலும் அடர்ந்திருந்த வனப்பகுதி இது. காட்டினைக் கழனியாக்கி விவசாயம் செய்ய முயற்சித்தபோது, பாலமுருகனாக பாலகுமாரனாக குமரக் கடவுள் காட்சிதந்ததாக தலவரலாறு கூறுகிறது.

காங்கேய நாட்டில், ஆந்தை குலத்தைச் சார்ந்த முதலிக்கவுண்டரிடம் ஏராளமான பசுக்கள் இருந்தன. அவற்றை மேய்ச்சலுக்கு ஓட்டிச் சென்றவர், கருக்கட்டான்



மரத்தடியில் கறவைமாடு ஒன்று, புற்று ஒன்றினருகில் சென்று, பாலைச் சொரிவதையும், பச்சிளங் குழந்தை முகத்தோடு பாம்பு ஒன்று புற்றிலிருந்து வெளிவந்து பால் அருந்தும் காட்சியைக் கண்டு அதிசயித்தார். முதலிக்கவுண்டரும் இதனைக் கேள்வியுற்று அங்கு செல்ல, அதே அரவம், பால் குடித்த குமரனாகவும், பால முருகனாகவும் அவருக்கு காட்சி அளித்ததால், வீரக்குமாரா! என மெய்சிலிர்க்கக் கூவினார்.

அதே இடத்தில், கருக்கட்டான் மரத்தடியில் உருவானதே வீரக்குமார சுவாமியின் அழகிய திருக்கோயில் - வடக்கு முகமாக வீரக்குமாரசுவாமி எழுந்தருளியுள்ளதால், 52 அடி உயர ராஜகோபுரமும் வடக்கு முகமாகவே அமைந்துள்ளது. 200 அடிக்கு சுற்றுமதில்கள் அமைந்து, ஒரு உள் சுற்றும் கொண்டுள்ளது.

திருச்சுற்றின் கிழக்குப்பகுதியில் கோமுனி மேற்கு நோக்கி அமர்ந்திட, அடுத்து எசகடக் குதிரைகள் இடம் பெற்றுள்ளன. தெற்குத் திருச்சுற்றில் வீரகுமாரசுவாமி சந்நிதியின் பின்புறம் புற்று வளர்ந்துள்ளது. இருபுறமும், பின்கால்களை விரித்தபடி, பால் சொரிவதை போல அமைந்த இரண்டு பசுக்களின் சிலைகள் உள்ளன. வடக்குத் திருச்சுற்றில் தொரட்டி மர விநாயகர் சந்நிதி உள்ளது.

ஐந்து பூதங்கள்

வீரக்குமாரசுவாமி சந்நிதிக்குள் செல்லும்



நுழைவாசலின் வலப்புறம் கம்பீரமாக, கிழக்கு நோக்கியபடி ஐந்து பூதங்கள் நிற்பதைக் காணலாம்.

முதலில் காண்பது கன்னிமார் சந்நிதியே! அனைத்துக் கோயில்களிலும், முகப்பு வாயிலிருந்தே நாம் மூலவரைத் தரிசித்திட முடியும், ஆனால் வெள்ளக்கோயில் வீரக்குமாரசுவாமி திருக்கோயிலில், நாம் காண்பது கன்னிமார் சந்நிதியையும், அக்கன்னிமார் சந்நிதியின் முன்னாள் பதினெட்டு சித்தர்களின் சிலைகள் அமைந்துள்ளன.

வீரக்குமாரசுவாமி

முன் மண்டபவாசலைக் கடந்து உள்ளே சென்று, சற்று மேற்குபுறமாக தெற்கே நோக்கினால், வீரக்குமாரனை தரிசிக்கலாம். இடப்புறம் முத்துக்குமார் சந்நிதியும், அடுத்து பால விநாயகர், உற்சவர் பரிவார தேவதைகளாக கன்னிமார் சந்நிதியும், நரிப்பழக்கவுண்டர், குமரப்பகவுண்டர் சந்நிதிகளும் உள்ளன.

பாதக்குறடு கவசம் அணிந்து, இடுப்பினில் தாங்குகச்சையும், உடைவாளும், குத்துவாளும் ஏந்தியபடி, தோளினில் சாட்டையும், இரு கரங்களிலும், சூலாயுதமும் தண்டும் ஏந்தியபடி, தலையில் சடாபாரம் கொண்டு நிஷ்டையில் நின்ற நிலையில் சாந்த சொரூபியாக கன்னிக்குமரனாக வீரக்குமரசுவாமி காட்சி தருகிறார்.

பெண்களுக்கு நேரில் தரிசனம் இல்லை

ஆதிபராசக்தியின் அருளை வேண்டி வீரக்குமாரன் சக்திவேல் ஏந்தி தவக்கோலத்தில் நின்ற போது, ஒரு



பெண்ணின் பார்வை அவன் மீதுபட்டு தவமும் கலைந்து, தணியா சீற்றமும் கொண்டார். அருட்பார்வையே தந்தருளும் குமரனின் அக்னிப்பார்வையிலே அந்தப் பெண்ணை சுட்டெரித்து விட்டதாகவும், அது முதற்கொண்டு ஐயனின் கண்களில் பெண்கள் படக்கூடாது தென்பது மரபு.

இதே மரபு இன்றும் கடைபிடிக்கப்பட்டு, எந்தப் பெண்ணும் வீரக்குமாரனை நேரில் கண்டுதரிசிக்கவோ, உள்சுற்றினுள் நுழையவோ கூடாது என்பது நடைமுறையில் இருந்து வருகிறது. இதனை மீற முயன்றவர்கள், குமரனின் கோபத்துக்கு ஆளாகி வருந்தியதும் செவிவழிச்செய்திகளாக உள்ளன. கண்குளிர வீரக்குமாரசுவாமியையும், அவனது அருளை முதலில் பெற்ற முதலிக்கவுண்டரையும் வழிபட்டு, வெளியே வருகிறோம்.

'அதிர்வெடி!'

வீரக்குமாரசுவாமிக்கு மிகவும் பிடித்தமானது. 'பொட்லி' எனும் அதிர்வேட்டுச் சத்தம் ஆகும். மக்கள் தங்கள் குறைகளைப் போக்கிக் கொள்ள, வீரய்யனின் வரம் வேண்டி, 'அதிர்வெடி' காணிக்கை செலுத்துகிறார்கள்.

வெள்ளையர் ஆட்சிக் காலத்தில், வெள்ளைத்துரை ஒருவரின் குதிரை வேட்டுச்சத்தத்தில் மிரண்டதால் சினமுற்ற துரை, அதிர்வெடிக்கு தடைவிதித்ததால், பார்வையிழந்து

பதறிப்போய், வீரக்குமாரனிடம் மண்டியிட்டு, தன்னை மன்னித்தருள வேண்டிய செய்திகளும் உள்ளன.

வாயைத் துணியால் கட்டியபடி!

வீரக்குமாரசுவாமிக்கு பூஜை செய்யும் பூசாரிகள், ஒவ்வொரு காலத்திலும், திருச்சுற்றை வலம் வரும் போதும், சந்நிதியில் பூஜை செய்யும் போதும், தங்கள் வாயைத் துணியால் இறுகக் கட்டிக் கொண்டு பூஜை செய்வதையும் காணலாம்.

சிறப்பு வழிபாடு

வாரந்தோறும் திங்கள், வெள்ளி ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாட்டுக்கு, அமராவதியிலிருந்து புனிதநீர் கொண்டு வரப்படுகிறது. அமாவாசை, பௌர்ணமி, கிருத்திகை நாட்களில் சிறப்பு வழிபாடு உண்டு. அமாவாசையன்று சுவாமி திருவீதி உலா நடைபெறும். மூலவருக்கு சந்தன அபிசேகமும், மஞ்சள் காப்புமே சார்த்தப்படும்.

அன்னதானம்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 04257 – 26519

**மின்னஞ்சல்:** vellakovilveerakkumaraswamy@gmail.com

**இணையதளம்:** www.Veerakkumaraswamy.info.in



## அருள்மிகு
## விக்கிரமசோழீசுவரர் திருக்கோயில்
### கண்ணபுரம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு விக்ரமசோழீஸ்வரர் |
| இறைவி | அருள்மிகு சௌந்தரவல்லி தாயார் |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | காரண ஆகமம் |

காங்கேய நாட்டின் வரலாற்றுச் சிறப்பை வெளிப்படுத்தும் கருவூலமாக அமைந்த சிற்றூர் கண்ணபுரம், வெள்ளக்கோயிலுக்கு தெற்கே 2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

கொங்கு நாட்டை கி.பி. 1004 முதல் 1047 வரை ஆட்சி புரிந்த கலிமூர்க்க விக்கிரமசோழன் காலத்தில் கட்டப்பட்ட கோயில்.

'அபிமான சோழபுரம்' வில்லவன் மாதேவி என்றும் கண்ணபுரத்தின் பகுதிகள் அழைக்கப்பட்டிருந்ததாக மெகன்சி

ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. வித்தகபுரி என்றும் ஒரு பெயர் இருந்ததாம்.

கொங்கு நாட்டில் இருந்த செங்கல் தளிகளை, கற்றளிகளாக மாற்றிய பெருமைகொங்குச் சோழர்களை சேரும்.

கண்ணபுரம் சிவாலயத்தில் உள்ள கல்வெட்டுக்கள், 'விக்கிரமசோழீசுவரர் உடையார்' என்று குறிப்பிடுவது இங்கே எழுந்தருளியுள்ள விக்கிரம சோழீசுவரரைத்தான். ஐந்து கல்வெட்டுக்கள் கண்டறியப்பட்டுள்ளன.

'வித்தகச் செல்வி' என்ற அழகு தமிழ்த் திருநாமத்துடன் திகழ்பவர், இத்தலத்தில் எழுந்தருளியுள்ள அன்னை. ஆறடி உயரம் கொண்ட அற்புதமான திருமேனி கலை நுணுக்கங்களுடன் கூடிய கற்சிலை வடிவம்.

அருணகிரிநாதர் புகழ்ந்து பாடிய ஆறுமுகப் பெருமான் ஆறடி உயரத்தில், மயில்வாகனராக எழுந்தருளியுள்ளார்.

மிகப்பெரிய திருச்சுற்றுடன் கூடியது கோயில் வளாகம். நந்தி மண்டபம், கொடிமரம், பரிவார தேவதைகள் அத்தனையும் கொண்ட திருக்கோயில்.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி.

## விமானத்தில் அறுபத்து மூவர்

சென்னைக்கு மேற்கே, பூந்தமல்லியை அடுத்துள்ள தலம் திருமழிசை ஆகும். 'தூங்கானை மாடம்' எனும் கஜப்பிருஷ்ட விமானம் அமைப்பைக் கொண்ட கருவறை விமானத்தின் கிரீவப் பகுதியில் சோமாஸ்கந்தரும், அவரைத் தொடர்ந்து வலமாக சுந்தரர் முதல் சேக்கிழார் வரை அறுபத்துமூன்று நாயன்மார்களும் தொகையடியார்களும் அமைக்கப்பட்டுள்ள அரிய காட்சியைக் காணலாம்.



## அருள்மிகு
## வஞ்சியம்மன் திருக்கோயில்
### மூலனூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வஞ்சியம்மன் |
| தல விருட்சம் | கருக்கட்டான் |

வெள்ளகோயிலுக்கு தெற்கில் 18 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது மூலனூர், தாராபுரம் செல்லும் சாலையையொட்டி கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. சோழீசுவரர் திருக்கோயில், அதன் எதிரில் உள்ளது கம்பத்தடி முருகன் திருக்கோயில்.

சோழீசுவரர் திருக்கோயிலுக்கு வடபுறம், சற்றுத் தொலைவில் உள்ளது வஞ்சியம்மன் திருக்கோயில்.

திருக்கோயில் நுழைவாசலை மூன்று நிலை இராஜகோபுரம் அழகுபடுத்துகிறது. நுழைவாசலுக்கு வெளியே இராஜகோபுரத்தையும் கருவறையையும் எதிர்நோக்கியபடி தீபத்தம்பம் உள்ளது. கம்பத்தின் அடிப்பாகத்தில் வஞ்சியம்மன் நின்ற கோலத்தில் காட்சிதருகிறாள். நான்கு கரங்கள் கொண்டு, அக்னிச் சுவாலை மகுடமேந்திய கோலம். பின் கரங்களில்



கத்தியும் வேலும் கொண்டு, முன்வலது கரத்தில் சூலாயுதமும், இடது கரத்தில் கபாலமும் கொண்டு, வஞ்சியம்மன் காட்சிதருகிறாள் கலைநயமிக்க புடைப்புச் சிற்பமாக.

இராஜகோபுரத்தின் இடதுபுறம் திருச்சுற்றின் மூலையில் அழகிய தடாகம் ஒன்று உள்ளது. தாமரை மலர்களில் அமர்ந்த நிலையில் அஷ்டலட்சுமிகள் காட்சி தருகின்றனர். கலைநயம் மிக்க, கற்பனை வளம் கூடிய அமைப்பு இது.!

இராஜகோபுர நுழைவாசலைக் கடந்ததும் எதிரே பலிபீடம், பளிச்சென்று காணும் கவசமிடப்பட்ட கொடிமரம், அன்னையின் வாகனமாகிய சிம்மம் ஆகியன உள்ளன. அதனையடுத்து அழகிய மகாமண்டபமும், பளிங்குத் தரையும், வண்ணப்பூச்சும் மேலும் மெருகூட்டு கின்றன.

வஞ்சியம்மனின் கருவறைக்கு வலப்புறம், மகா மண்டபத்தையொட்டி அமைந்துள்ளது. ‘வேள்விச்சாலை’ அழகியதோர் மண்டபமும், கமல வேதிகையுடன் கூடிய வேள்விக்குண்டம் அழகுற அமைந்துள்ளது. சிறப்பு வழிபாடுகள் நடைபெறும் நாட்களில் இங்கே புனிதவேள்வி நடைபெறும்.

மகாமண்டபத்தின் வலப்புறம், விநாயகர், வள்ளி தெய்வயானையுடன் கூடிய சண்முக சுப்ரமண்யர் சந்நிதிகள். வஞ்சியம்மனின் கருவறைக்கு முன் அர்த்தமண்டபம், அன்னை வஞ்சியம்மானை நாடிவந்தோர்க்கு அஞ்சேல் என அபயக்கரம் நீட்டும் பாணியில் அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறாள். நான்கு திருக்கரங்கள் சந்தனக்காப்பு அணிந்து, வெள்ளிக்கவசம் சார்த்தி, பட்டாடையுடன் கம்பீரமான திருக்கோலம்.

அம்மனின் இடதுபுறம் செல்லாண்டியம்மன் சந்நிதி அதன் எதிரில், ஆக்ரோஷமான 'சிம்மம்' உள்ளது. திருச்சுற்றில் சப்தகன்னிமார் சந்நிதியும், வரிசையாக அமர்ந்துள்ள தேவதை மண்டபமும் உள்ளன. திருக்கோயிலுக்கு வெளியே தனிச்சந்நிதி கொண்டு கருப்பராயன் சுவாமி அருள்புரிகின்றார்.

அமாவாசை மற்றும் வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 – பகல் 12.00 மணி,

மாலை 4.00 – இரவு 8.00 மணி



அருள்மிகு வஞ்சியம்மன் திருக்கோயில் மூலனூர் தாராபுரம் வட்டம் திருப்பூர் மாவட்டம்



## அருள்மிகு
## காடுஅனுமந்தராய சுவாமி திருக்கோயில்
### தாராபுரம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு காடு அனுமந்தராய சுவாமி |
| தீர்த்தம் | நரசிம்ம தீர்த்தம் |
| தல விருட்சம் | அரச மரம் |
| ஆகமம் | கதந்த்ர ஸார முறை |
| இசைக்கருவி | ஜண்டை, நாகரி, ஜால்ரா, சங்கு, சேகண்டி |

திருப்பூருக்கு தென்கிழக்கே 55 கி.மீ. தொலைவில் உள்ளது தாராபுரம். மதுரை – கோவை சாலையில் முக்கியமான சந்திப்பு.

மகாபாரக் கதையில் ‘விராட பருவத்தில்’ பாண்டவர்கள் ஐவரும், எவரும் அறியாது ‘அஞ்ஞான வாசம்’ செய்த பகுதி என்று கூறுவர். ஆஞ்சநேய பக்தரான வியாசராயர் நாடு முழுவதும் கட்டிய 732 ஆஞ்சநேயர் கோயில்களில் 89வது திருக்கோயில்.

காட்டுப்பகுதியாக இருந்ததால், இந்தக் திருக்கோயிலை

‘காடு அனுமந்தராயசுவாமி’ திருக்கோயில் என்றே அழைக்கின்றனர். சாலையையொட்டி, அலங்கார வளைவு நம்மை எதிர் கொண்டழைக்கிறது .

மகாமண்டபத்தைக் கடந்து நேராக மூலவர் அனுமந்தராய சுவாமியைக் காண விழைகிறோம். ஏழடி உயரம் கொண்ட, ஆஜானுபாகுவாக அற்புதத் திருமேனியாக, அபயக்கரத்தை உயர்த்தியபடி நின்ற கோலத்தில் வடகிழக்கு திசை நோக்கியபடி எழுந்தருளியுள்ள அற்புதக் கோலம்.

இடுப்பிலே மணிசலங்கைகள், கழுத்தில் சுதர்சன சாளகிராமமாலைகள், வலதுபுறம் இடுப்பில் சொருகியபடி பிச்சுவாகத்தியும், இடது கரத்தில் சௌகந்திக மலரை ஏந்தியபடி, வலது கரத்தை உயர்த்தி அஞ்சேல்! நாமிருக்க அச்சமேன்! என்று கூறுவது போல முகத்தை வடகிழக்கு திசை நோக்கித் திரும்பியபடி எழுந்தருளியுள்ளார்.

மூன்று மணிகளுடன் கூடிய வால், வலது கரத்தைத் தொட்டபடி, பின்புறம் வளைந்து சென்று, இடதுபுறம் முடிவடைகிறது. ஆஞ்சநேயராக மூலவர் அமைந்த போதிலும், உற்சவத் திருமேனியாக கோதண்டராமருக்குத்தான் முதல் வழிபாடு.

லட்சுமி நரசிம்மர்

காவிரியும், பவானியும், சங்கமிக்கும் கூடுதுறையில், மூழ்கியபடி இருந்த லட்சுமி நரசிம்மர் திருமேனி, பக்தர் ஒருவரின் பார்வையில் பட்டதாம், நூறு ஆண்டுகளுக்கு முன்னர், அவர் அதனை ஆஞ்சநேயர் கோயிலில் தனி சந்நிதி அமைத்து பிரதிஷ்டை செய்தாராம். திருக்கோயிலின் பெருவிழா ‘நரசிம்மஜெயந்தி’ யையொட்டியே நடைபெறுவதும் குறிப்பிடத்தக்கது.

டீலன்துறை செய்த கருவறை திருப்பணி

நூறு ஆண்டுகளுக்கு முந்தைய செய்தி இது. 1810ல் கோவை மாவட்ட ஆட்சியராக ‘டீலன்’ என்ற வெள்ளையர்





பணியாற்றியுள்ளார். அவருக்கு முதுகில் ராஜபிளவை என்ற கட்டி உருவாகி அவதிக்குள்ளானார். தாராபுரத்திற்கு வருகை தந்த அவரை ‘ஆஞ்சநேயரை’ தரிசிக்க அழைத்துச் சென்றனர் மக்கள். அந்த டீலன்துரைக்கு ஏற்பட்ட அவதி, ஆஞ்சநேயரை தரிசித்ததும் விலகியதாக உணர்ந்தார். அழகிய கருவறை ஒன்றையும், ஆஞ்சநேயருக்கு கட்டித் தந்தார் சீமைத்துரை.

ஜெயதீர்த்தர், ராகவேந்திரர் ஆகியோரது பிருந்தா வனங்களும் இங்கே அமைந்துள்ளன. மல்கேடா, மந்திராலயம் ஆகிய புண்ணியத் தலங்களின் திருமண்ணைக் கொண்டு அமைத்தவை அவை. திருக்கோயில் ‘நரசிம்ம தீர்த்தம்’ என்ற கிணறு உள்ளது. ராமநவமி, வைகுந்த ஏகாதசி, அனுமத் ஜெயந்தி ஆகியவை முக்கியத் திருவிழாக்கள்.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 12.30 மணி

மாலை 4.30 மணி – இரவு 8.30 மணி

**தொலைபேசி: 04258 – 220749**



## அருள்மிகு
## ஆல்கொண்டமால் திருக்கோயில்
### சோமவாரப்பட்டி

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு ஆல்கொண்டமால் |
| ஆகமம் | பாஞ்சராத்ர |

திருப்பூர் மாவட்டம், உடுமலைப்போட்டைக்கு வடமேற்கில் 12கி.மீ. தொலைவில், பெதப்பம்பட்டி அருகில் உள்ளது.

பொதுவாக 'மாலகோயில்' என்றே மக்கள் இதனைக் குறிப்பிடுகின்றனர். ஆலமரத்தூர் என்று அருகில் ஒரு சிற்றூர் இருக்கிறதாலும், 'ஆலிலைக் கண்ணனை' ஆவினங்களையும், கால்நடைகளையும் காக்கும் தெய்வமாகக் கருதுவதாலும், 'ஆல் கொண்ட திருமால்' என்று இல்லாமல் 'ஆல் கொண்டமால்' என மருவியிருக்கக் கூடும்.

பக்தர்களின் கால்நடைகளைக் காத்திடும் தெய்வமாக பல ஊர்களில் கோயில்கள் உருவாகியுள்ளன. திருப்பூர் மாவட்டத்தில் சேவூருக்கு வடக்கில் குட்டகம் எனும் ஊரில் உள்ள மாதேசுவரர் கோயிலும், ஈரோடு மாவட்டம் தாளவாடி அருகில் கும்டாபுரத்தில் உள்ள காரைஈசுவரர் திருக்கோயிலும், 'ஆல்கொண்டமால்' கோயிலைப் போன்றவையே.

இங்கெல்லாம் நந்திதேவரையே சிவமூர்த்தமாக வழிபடுகின்றனர். திண்டுக்கல்லையடுத்த ரெட்டியார் சத்திரம் கோபிநாதசுவாமி கோயில், மலைக்கோயிலாக அமைந்து புகழ்பெற்றுள்ளது. ஆல்கொண்டமால் கோயிலில் 'கிருஷ்ணரே' முக்கிய தெய்வமாக இடங்கொண்டுள்ளார்.

மூன்று அவதாரங்களும் ஒன்றே!

பலகை சிற்பமாக அமைந்துள்ள ஆல்கொண்டமால் சந்நிதியில், திருமாலின் மூன்று அவதாரக் காட்சிகளைக் காண முடிகிறது. மேற்பகுதியில், பசுவினங்களோடு கூடிய கண்ணனின் உருவமும், நடுப்பகுதியில் சீதாதேவியுடன் கூடிய ராமபிரானையும், கீழ்ப்பகுதியில் குதிரை மீதமர்ந்தபடி கல்கி அவதாரக் காட்சியும் உள்ளன. கண்ணனின் இருபுறமும் சூரிய சந்திரன் பொறிக்கப்பட்டுள்ளது. இது போன்ற தொரு மூர்த்தம், தமிழ்நாட்டில வேறு எந்தத் தலத்திலும் காணக் கிடைக்க வில்லை என்பதை உறுதிபடக் கூறலாம்.

பால் வளப்பெருக்கினையும், கால்நடைகளைப் பற்றும் நோய்களைக் களையவும், ஆல்கொண்ட மாலை கண்கண்ட கடவுளாக மக்கள் வழிபடுவதைக் காணலாம்.

தைமாதத்தில் பொங்கலையொட்டி நடைபெறும் ஐந்து நாட்கள் பெருவிழாவில், மக்கள் தங்கள் கறவை மாடுகளின் பாலை செம்புகளில் கொண்டு வந்து திருமாலுக்குப் படைத்து தீர்த்தம் வாங்கிச் சென்று கால்நடைகளுக்கு தெளிப்பர்.

உழவர் பெருமக்கள், பட்டிப்பொங்கலன்று ஈன்ற பசுங்கன்றுகளை கோயிலுக்கென விட்டுச் செல்வதும் அவற்றை சலங்கை மாடு, சூலம் போட்ட காளை என்பதும் வழக்கத்தில் உள்ளதாகும். கால்நடைகளுக்காக நேர்த்திக்கடன் செலுத்துவோர், உண்டியலில் காணிக்கை செலுத்தியும், கால்நடைகளின் உருவாரங்களைச் செய்து வைப்பதும் காணலாம்.

தொலைபேசி எண்: 04252 – 247254

## பெரிய பிரம்மா

அண்ணாமலையாரின் முடியைத் தேடிச் சென்று தோல்விகண்ட பிரம்மாவிற்கு கோயில் கிடையாது என்பர். ராஜஸ்தானில் புஷ்கர் என்னுமிடத்தில் கோயில் உள்ளது.

தமிழ்நாட்டில் நான்கு திருத்தலங்களில் நான்முகனுக்கு சந்நிதி உள்ளது. தனிக்கோயிலாக இல்லாவிடினும், விமானத்துடன் கூடிய தனிச் சந்நிதிகளில், பிரம்மா இடம் கொண்டுள்ளார்.

திருச்சி பெரம்பலூர் சாலையில், சிறுகனூருக்கு மேற்கில் 4 கி.மீ. தொலைவில் உள்ளது திருப்பட்டூர் பிரம்மபுரீசுவரர் திருக்கோயில், இங்கு சிவபெருமானின் வலப்புறம், ஆறடி உயரம் கொண்ட பிரம்மா சந்நிதி உள்ளது.

## திருத்தலச்சுற்றுலா

கோவை, ஈரோடு, திருப்பூர் ஆகிய பெரு நகரங்களுக்கு வருகைதரும் சுற்றுலாப் பயணிகளும் மாவட்டத்திலுள்ள மக்களும், ஒரே நாளில் பல திருக்கோயில்களுக்கு சென்று வழிபாடு செய்து இறையருள் பெற்று, மாலையில் திரும்பிவரும் வகையில், இந்து சமய அறநிலையத்துறை கோவை மாண்டலம் பல அரிய திட்டங்களை முன்வைக்கிறது.

பஞ்சலிங்கத்தலங்கள், பஞ்சவைணவத் தலங்கள் ஒரே நாளில் ஒன்பது முருகன் திருக்கோயிலகள், நவககிரகத் திருத்தலங்கள் என்று பத்துக்கும் மேற்பட்ட பயணத்திட்டங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன. மேலும் விவரமறிய, அந்தந்த மாவட்ட உதவி ஆணையர் அலுவலகத்துடன் தொடர்பு கொள்ளவும்:

உதவி ஆணையர்,

இந்து சமய அறநிலையத்துறை

| | | |
|---|---|---|
| தொலைபேசி: | கோவை | : 0422 - 2244335 |
| | திருப்பூர் | : 0421 - 223100 |
| | ஈரோடு | : 0424 - 2255789 |



## அருள்மிகு
## மாரியம்மன் திருக்கோயில்
### உடுமலைப்பேட்டை

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு மாரியம்மன் |
| தல விருட்சம் | வேப்ப மரம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

திருப்பூரிலிருந்து தென்மேற்கில் 55 கி.மீ. தொலைவில் உள்ள நகரம் உடுமலைப்பேட்டை - பொள்ளாச்சி - பழனி நெடுஞ்சாலையில், பொள்ளாச்சியிலிருந்து 30 கி.மீ தொலைவில் 200 ஆண்டுகளுக்கு முன்னர் உருவான திருக்கோயில்.

எங்கும், வடக்கு வாயிற் செல்வியாக அருளாட்சி செய்யும் அன்னை, உடுமலைப்போட்டையில், கிழக்கு திசை நோக்கி எழுந்தருளியுள்ளாள். கோபுர வாசலிலிருந்தே காணுமளவிற்கு கருவறையின் பீடம் உயர்ந்துள்ளது.



மாராசூரனை மாய்த்து மக்களைக் காத்திட்ட அன்னையை மாரியம்மன் என்று அழைக்கின்றனர். வேனிற்காலத்துக் கொடுமையை, அன்னைக்குப் பிரியமான வேப்பங்கொழுந்தின் காற்றினால் குறைத்து, மழையைத் தருபவளாக அன்னை வணங்கிப் போற்றப்படுகிறாள்.

திருக்கோயிலுக்கு, தெற்கு மற்றும் வடக்கு திசைகளிலும் நுழைவாசல்கள் உள்ளன. பலிபீடம், கொடிமரம், அர்த்தமண்டபம், மகா மண்டபம், அதனை யொட்டியவாறு அன்னையின் கருவறை என்ற ஆகமவிதிகளின் படி அமைந்துள்ள திருக்கோயில், இருதள விமானம் கருவறைக்கு அழகூட்டுகிறது.

மகாமண்டபத்தின் முகப்பில், திரிசக்திகளாக, துர்கா லட்சுமி, சரஸ்வதி ஆகிய மூன்று தேவியரும் சுதைசிற்பங்களாக காட்சி தருகின்றனர். மண்டபத்தின் வெளிப்புறம், மகாசக்தியின் பல்வேறு வடிவங்களும் இடம் பெற்றுள்ளன.

அமர்ந்த கோலத்தில் அன்னை

அக்னி மகுடமும், அதன் மீது அரவக்குடையும் கொண்டு அமர்ந்த கோலத்தில் அருளாட்சி செய்கிறாள் அன்னை. திருவடிகளில் சிலம்பும், திருக்கரங்களில் கங்கணமும், விரல்களில் மோதிரமும், பாதங்களில் சலங்கையும் அணிந்தபடி சுகாசனத்தில் வீற்றிருக்கிறாள்.

நான்கு கரங்களிலும் டமருகம், அங்குசம், கத்தி, கபாலம் ஆகியவற்றை ஏந்தியபடி, இடது காலை மடித்து அமர்ந்தபடி வீற்றிருக்கிறாள். அன்னை பராசக்தியின் பல்வேறு வடிவங்களில், சம்காரத் தோற்றத்தையே காணும் நிலையில் பக்தர்களுக்கு வேண்டிய வரம் அனைத்தையும் தந்தருளும் கோலம் இது.

அன்னையின் திருமேனிக்கு முன்பு, தானே முளைத்தெழுந்த 'சுயம்பு' வும் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. அரசமரத்தைச் சுற்றிலும் அழகிய சுற்றுப்பீடம் எழுப்பி, நாகதேவதைகள் எண்மரை, பிரதிஷ்டை செய்திருப்பதும், அவரவர் முன்னே அவர்களின் திருநாமம் குறிப்பிடப்பட்டுள்ளதும், கவனிக்கத்தக்கது.

மாரியம்மனின் திருநீறும், தீர்த்தமுமே அருமருந்தாகிய நிலையில், பக்தர்கள் தங்கள் நேர்த்திக்கடனை பல்வேறு வகையாக நிறைவேற்றுகிறார்கள். பூவோடு எடுத்தல், மாவிளக்கு ஏற்றுதல், முளைப்பாரிகையிடுதல், உப்பும் உருவமும் சமர்ப்பித்தல் என்று எண்ணற்ற வகையானவை, கோரிக்கைகள் சில, காணிக்கைகள் பல!

உடுமலைப்பேட்டை மாரியம்மன் திருக்கோயிலில், மாதந்தோறும் நடைபெறும் 'நிறைநிலா' சிறப்பு வழிபாடுகள், உள்ளத்தைத்தொடும் வண்ணம் அமைகின்றன. ஆடிமாதம், தைமாதம், வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு அபிஷேகத்துடன் வெவ்வேறு அலங்காரங்களுடன் காட்சி தருவாள் அன்னை.

அவ்வப்போது பக்தர்களின் கோரிக்கைகளுக்குகேற்ப சிறப்பு வேள்விகளும் நடைபெறுகின்றன.

பதினைந்து நாட்கள் நடைபெறும் பெருந்திருவிழா, பங்குனி சித்திரை மாதங்களில் விமரிசையாக நடைபெறும். நோன்பு சாற்றி, திருக்கம்பம் நட்டு, கொடியேற்றத்துடன் துவங்கும் இத்திருவிழா, பூவோடு எடுத்தல், மாவிளக்கு, திருக்கல்யாணம், தேரோட்டம், பரிவேட்டை இப்படித் தொடர் நிகழ்ச்சிகளாக உடுமலைப்பேட்டையையே அதிரவைக்கும்.

தங்கக்கவசம் : அருள்மிகு மாரியம்மனுக்கு தங்ககவசம் சார்த்தி வழிபடவும் வகை செய்யப்பட்டுள்ளது. ரூ.500/- கட்டணம் செலுத்தி, அவரவர் விரும்பும் நாளில் தங்கக் கவசம் சார்த்தி சிறப்பு வழிபாடுகள் நடத்தப்படும்.

அன்னதானம் : மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

ஆன்மீக வகுப்புகள் : ஞாயிறுதோறும் சிறார்களுக்கு மாலையில் ஆன்மீக ஒழுக்க நெறிவகுப்புகள் நடத்தப்படுகின்றன.

ஆன்மீக சொற்பொழிவு : ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் மாலை 6.00 மணி முதல் 8.00 மணி வரையில் ஆன்மீகச் சொற்பொழிவு நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது. 'உச்சிக்காலம்' சிறப்புமிக்க வழிபாடு ஆகும்.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்;

காலை 6.00 - 12.00 மணி, மாலை 4.00 - 9.00 மணி

தொலைபேசி: 04252 - 224755

மின்னஞ்சல்: mariammanudt@dataone.in

இணையதளம்: www.udumalai.mariamman.in





## அருள்மிகு
## பிரசன்ன விநாயகர் திருக்கோயில்
### உடுமலைப்பேட்டை

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு பிரசன்ன விநாயகர் |
| தல விருட்சம் | அரச மரம் |
| ஆகமம் | சைவ ஆகமம் |

உடுமலைப்பேட்டை நகரின் பெருமைக்கு சிகரமாக அமைந்திருப்பது, இங்குள்ள பிரசன்ன விநாயகர் கோயிலே ஆகும். மூலவராக அமர்ந்துள்ளவரோ காசிவிசுவநாதர். பெருமையெல்லாம் யானை முகனுக்கே!

அழகிய இராஜகோபுரத்துடன் கூடிய திருக்கோயில் உள்ளே நுழைந்ததும், நம் கவனத்தைக் கவருபவர், பிரசன்ன விநாயகர் தான்! அப்படி என்ன சிறப்பு அவருக்கு! கொங்கு மண்டலத்திலே உள்ள மிகப்பெரிய விநாயகர் திருமேனிகளில் இவரும் ஒருவர் ஆவார்.

மதுரைமீனாட்சி அம்மன் திருக்கோயிலுக்குச் சென்றவர்கள், அங்கு தென்திசை நோக்கியபடி, பொற்றாமரைக் குளத்தின் அருகே உள்ள ‘முக்குறுணி’ விநாயகரை தரிசித்திடாமல் வரமாட்டார்கள்! பெயருக்கேற்ப அத்தனை ஆகிருதி!

அவரைப் போலவே, மிகப்பெரிய திருமேனியாக உடுமலையில் அமர்ந்துள்ளார் பிரசன்ன விநாயகர். மதுரையைப் போல உயர்ந்த பீடத்தில் அமர்ந்திருப்பதால் எத்தனை கம்பீரமாக விருப்பார்? கோவை புலியகுளம் முந்திவிநாயகர், ஈச்சநாரி விநாயகர், அடுத்து உடுமலை பிரசன்ன விநாயகர்தான். அடுத்தடுத்து உள்ள இருமாவட்டங்களை உள்ளடக்கிய கொங்கு மண்டலத்திற்கு மேலும் பெருமைசேர்ப்பவர் பிரசன்ன விநாயகர்.

நாயக்கர் காலத்து வடிவமைப்பு, சிலையில் காணும் 'நகாசு' வேலைகளில் தெள்ளத் தெரிகிறது. முந்நூறு, நானூறு ஆண்டுகளுக்கு முற்பட்டதாகக் தானிருக்கும். ஒரு மேட்டுப்பகுதியில் விநாயகர் மட்டும் அமர்ந்திருக்க, அவருக்க அருகில் அம்மையப்பனுக்கும் சேர்த்துக் கோயில் எழுப்பியிருக்கக்கூடும். உலகையே மறந்துவிடலாம் அவர் முன் கரம் கூப்பிதொழும்போது.

ஆலயத்தில் பிரதான கருவறையில் காசிவிசுவநாதர் அருள்பாலிக்கிறார். விசாலாட்சியம்மைக்கும் தனிச்சந்நிதி. பரிவார தேவதைகள், தத்தம் இடத்தைப் பிடித்துக் கொண்டுள்ளன.

வெள்ளித்தேர்

மாதந்தோறும் சஷ்டி, கிருத்திகை ஆகிய நாள்களில் மாலையில் வெள்ளித்தேர் உலாநடைபெறுகிறது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடை பெறுகிறது

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 - 12.00 மணி

மாலை 4.00 - 9.00 மணி

தொலைபேசி:

04252-221048





## அருள்மிகு
## அமணலிங்கேசுவரர் திருக்கோயில்
### திருமூர்த்திமலை

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு அமணலிங்கேசுவரர் |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | சைவ ஆகமம் |

உடுமலைப்பேட்டைக்குத் தெற்கே 21 கி.மீ. தொலைவில் ஆனைமலைத் தொடர்ச்சியில் அழகுற அமைந்துள்ளது திருமூர்த்திமலை. சுற்றிலும் மலைகள் சூழ்ந்து மலையடி வாரத்தில் அமணலிங்கேசுவரர் கோயில் உள்ளது. மலை மீது 900 மீ. உயரத்தில் ‘பஞ்சலிங்கம்’ அமைந்துள்ளது. தோணி நதி என்னும் பாலாற்றங்கரையும், நீர்வீழ்ச்சியும் இதனை ஒரு சிறந்த சுற்றலாத் தலமாக மாற்றியுள்ளது.

ஒவ்வொரு திருக்கோயிலும் அதன் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய பெருமைகளைக் கொண்டதாக விளங்குகின்றன. திருமூர்த்தி மலை தலபுராணப் பாடல்

‘உரைதிரி மூர்த்தி வெற்பை ஒப்பதோர் தலமும் நன்சீர்
பெருமும் மூர்த்திக் கொப்பர் மூர்த்தியும் பெரும் பாவங்கள்
கருகருட் டோணிக்கொப்பர் தீர்த்தமும் சுழநிலிந்த
ஒருதிரிபுவனத் துள்ளுமில்லையென்றறையலாமே”

“திரிமூர்த்திகளும் உறையும் திருத்தலத்தில் பாவங்கள் அதன் நீரில் கரையும், உலகில் இதற்கு ஏதுமில்லை!” என்ற பொருள்படி அமைகிறது இந்தப்பாடல்.



மும்மூர்த்திகள் எழுந்தருளியுள்ளதால் திரிமூர்த்திமலை என்றே வழங்கப்பட்டு வருகிறது. தோணி நதிக்கரையில் இடங்கொண்டவரோ பரமேசுவரன் ஆகிவிட்டபடியால், அமலிங்கம் என்றழைக்கப்பட்டு 'அமணலிங்கம்' என்று மருவி விட்டதாகவும் கூறுவர். திருமூர்த்தியாண்டவர், தெற்குசாமி, கஞ்சிமலையான் தென்கைலாச மூர்த்தி என்று பல்வேறு பெயிரிட்டு ஈசுவரனை இங்கு மக்கள் வழிபடுகிறார்கள்.

தோணி நதி

திருக்கோயிலிருந்து தென்மேற்கில் 1 கி.மீ. தொலைவில், சிற்றோடையாக உருவெடுத்த தோணி ஆறு 'பஞ்சலிங்க அருவி' யாக பாய்வது, இத்திருத்தலத்தின் சிறப்பு ஆகும். மருத்துவ குணம் கொண்ட மூலிகைகள் பலவற்றை தழுவியபடி, அருவிநீர் வருவதால் மக்கள் உடற்பிணிகள் பலவற்றையும் அகற்றுகிற தென கூறுவர்.

தலபுராணம்

962 பாடல்களைக் கொண்ட திருமூர்த்திமலை தலபுராணம் வேலாயுதபண்டிதர் என்பவரால் இயற்றப்பட்டது. புராண வசனமாகவும் பிற்காலத்தில் ஒரு நூல் எழுதப்பட்டுள்ளது. 'கஞ்சிமலை' என்றழைக்கப்பட்ட இம்மலைப்பகுயில் மாமுனிவர் அத்திரி தனது கற்புநெறி தவறாத மனையாள் அனுசூயையுடன் வாழ்ந்து வந்தார். அவளது கற்புநெறியை உலகோருக்கு எடுத்துரைக்க நாரதமுனிவர் ஒரு நாடகம் ஆடினார். உருக்குக் கடலை உருண்டைகளை, அனுசூயையின் கரங்களால்

பொரிக்கவைத்து, அதன் மூலம் முப்பெரும் தேவியரின் ஆத்திரத்தைத் தூண்டினார். அவர்கள் மூவரின் வற்புறுத்தலால் மும்மூர்த்திகளும், அத்திரி முனிவரின் ஆசிரமம் ஏகிட அனுசூயை தனது கற்புநெறியால் அவர்கள் மூவரையும் சிறு குழந்தைகளாக்கிப் பாலூட்டினாள். கணவன்மாரைக் காணாத தேவியர்கள், அனுசூயையிடம் வந்து, அவளது கற்புநெறியைப் போற்றி, தம் கணவன்மாரை மீட்டுச் சென்றனர் என்கிறது புராணம்.

நாரதர், அரிச்சந்திரன், தருமபுத்திரர், திரிசங்கு போன்றவர்கள் வணங்கி வழிப்பட்ட தலம்.

பாண்டியர் திருப்பணி

அடிவாரத்தில் மிகப் பிரம்மாண்டமாக காட்சி தருவது ஆயிரங்கால் மண்டபம். பாண்டிய மன்னர்களின் திருப்பணி என்பதை கூரையில் பொறிக்கப்பட்டுள்ள மீன் சின்னங்கள் குறிப்பிடுகின்றன.

தீபத்தம்பம்

முப்பதடி உயரம் கொண்ட கருங்கல்லினால் தீபத்தம்பம், திருக்கோயிலின் முன்புறம் அமைந்துள்ளது. எட்டு திக்குகளையும் நோக்கும்படி அமைந்துள்ள அதன் மண்டபத்தூண்களில், ஊர்த்துவ தாண்டவர், அகோரவீரபத்திரர், பத்திரகாளி, துர்க்கை, விசாலாட்சி ஆகிய சிற்பங்களோடு, வேணுகோபாலர், ராமபிரான், நரசிம்மாவதாரம் ஆகிய மூர்த்தங்களும் காணப்படுகின்றன.

முருகப்பெருமான்

'குன்றிருக்குமிடமெல்லாம் குமரனுக்கு கோயில் உண்டு' என்பதை மெய்ப்பிக்க, குமரக்கடவுள், பால சுப்பிரமணியராக தனிக்கோயில் கொண்டுள்ளார். ஞாயிறு, கார்த்திகை போன்ற நாட்களில் சிறப்பு வழிபாடும், மயில் வாகனத் திருவுலாவும் கொள்வார் குமரவேல்.

சப்தகன்னிமார்

ஒரேபாறை மீது, ஒரே கல்லில் செதுக்கப்பட்ட சப்தகன்னியர்கள் சிலைகள், அமணலிங்கேஸ்வரர் சந்நிதியின் கன்னிமூலையில் உள்ளன. மூலவர் அமணலிங்கேசுவரரை வலம் வரும் போது, பெண்கள் தவறாது வணங்கிச் செல்லும் சந்நிதி இது.

எட்டுக்கால் மண்டபம்

தீபத்தம்பத்திற்கும், மூலவர் சந்நிதிக்கும், இடையே எடுப்பாக சுற்றிலும் ஐந்து படிகளைக் கொண்ட எட்டுக்கால் மண்டபம் எழிலுறக் காட்சி தருகிறது. புராணக் காட்சிகள் அதன் தூண்களில் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

மூவரும் ஒரே இடத்தில்!

பஞ்சலிங்கங்கள் அமைந்துள்ள மலையிலிருந்து பாய்ந்து வரும் தோணி நதியின் அடிவாரத்தில், அமண லிங்கேசுவரர் சந்நிதி அமைந்துள்ளது. மும்மூர்த்திகளையும் பஞ்சலோகத் திருமேனியாக, அலங்கரித்து வைத்து பூஜைகள் நடப்பதும் மிகப் பொருத்தமே!

சிவராத்திரி திருவிழா

மகாசிவராத்திரி, திருமூர்த்திமலை, திருக்கோயிலில் புகழ்மிக்க திருவிழா ஆகும். இரவு முழுவதும் கண்விழித்து, விரதமிருந்து ஈசன் அருள்பெற ஆயிரக்கணக்கான மக்கள் கூடிடும் திருவிழா அது. தமிழ்புத்தாண்டு, ஆடிப்பெருக்கு மற்றும் அமாவாசை நாட்களிலும் பக்தர்கள் பெருமளவில் கூடுவர்.

நாள்தோறும் மூன்றுகால வழிபாடு நடைபெறுகிறது. காலை 6.00 மணி முதல் மாலை 6.00 மணிவரை நடை சார்த்தப்படாமல் திறந்தே இருக்கும் என்பதும் குறிப்பிடத்தக்கது.

அன்னதானம்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

தொலைபேசி: 04252 - 265440

## தீயவை ஒழிந்திட

தீயவைகளை அழித்து, நல்லவற்றை வளரச் செய்வதே இறைவனின் செயல் ஆகும். அசுரர்களைப் பெருமான் அழிப்பதை ஐதீக உற்சவங்களாக நடத்தப்படுகின்றன. திரிபுர சம்ஹாரம், கஜ சம்ஹாரம், அந்தகாசுரவதம், கால சம்ஹாரம் போன்றவை மிகச் சிறப்பாக நடைபெறுவதைக் காணலாம்.

தமிழ்நாடு முழுவதும், அனைத்துத் தலங்களிலும், நாம்காண்பது கந்தசஷ்டியும் சூரசம்ஹாரமும் தான். திருச்செந்தூரில் நடைபெறும் சூரசம்ஹாரம், உலகப்புகழ் பெற்றது. கடலருகில் மக்கள் அலை அலையாக கூடி, முருகப்பெருமான் சூரனை வதம் செய்யும் காட்சியைக் கண்டு ஆனந்திப்பர்.

சிக்கல், பழநி, திருப்பரங்குன்றம், மருதமலை, சுவாமிமலை, திருப்போரூர், மயிலம், வயலூர் போன்ற தலங்களில் சூரசம்ஹாரம் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. இராமேசுவரத்தில், இராவண சம்ஹார விழா நடைபெறுகிறது.




## அருள்மிகு
## தாண்டவேசுவரசுவாமி திருக்கோயில்
### கொழுமம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சோழீசுவரர் |
| இறைவி | அருள்மிகு பிரகன்நாயகி |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | சைவ ஆகமம் |

திருப்பூர் மாவட்டம், உடுமலைப்பேட்டைக்குத் தென்கிழக்கே, 18.கி.மீ. தொலைவில் அமராவதி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. ‘இனாம் சங்கிராமநல்லூர்’ என்று முன்பு அழைக்கப்பட்ட திருத்தலம் இது. குழுமூர், குழுமம், கொழுமம் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளது.

சோழீசுவரர் என்ற திருநாமத்துடன் ஈஸ்வரன் எழுந்தருளியுள்ள போதிலும், இங்குள்ள கலை நயமிக்க நடராசப் பெருமானின் உலோக உலாத் திருமேனியின் புகழ் காரணமாக தாண்டவேசுவரர் திருக்கோயில் என்றே பொதுமக்களால் அழைக்கப்பட்டு வருகிறது.

உலகுடைய பிராட்டியார் சதுர்வேதிமங்கலம், மாதவ சதுர்வேதி மங்கலம், விக்கிரமசதுர்வேதிமங்கலம் என்றும் மறையோர் வாழ்ந்து வந்துள்ள பகுதிகளாகப் புகழ்பெற்ற ஊரே கொழுமம் 'கரை வழிநாட்டுக்குழுமம்' இனாம் சங்கிராமநல்லூர்க் குழுமம் என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

சோழன் பெருவழி, விக்கிர சோழ நல்லூர், வீரநாராயண நல்லூர், கேரள கேசரி நல்லூர், கீழ்க்கவ்வாபுரம், திருவளர்துறை, அகரம்புத்தூர், உமாபரமேசுவரி நல்லூர், தென்னூர் என்றும் வேறு பெயர்களும் வழங்கியதாகக் கூறுவர்.

கொடைவள்ளல் குமணனின் வரலாற்றோடும், "குமுமம்" இணைத்துப் பேசப்படுகிறது. ஆயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன், சிற்றரசனாக விளங்கிய கொடைவள்ளல் குமணன், இரப்போர்க்கும், எளியவர்க்கும் இல்லையென்னாமல் பொருள் ஈந்து புகழ் பெற்றவன். குமுண நகர் என்று அவனது பெயர் இத்தலத்திற்கு வழங்கப்பட்டு, 'குழுமூர்' என்று ஆகியதாக அகநானூறு, 168ம் செய்யுளை மேற்கோள் காட்டுவர். அது,

"பய்யான்ற குன்றிற் படுநிழற், சேர்ந்த
நல்லான் பரப்பிற் குழுமூர், ஆங்கண்
கொடைக் கடன் என்ற கோடா நெஞ்சின்
உதியன்............" என்கிறது.

அப்படி குழுமூர் என்றழைக்கப்பட்ட தலமேநாளடைவில் குழுமம் என்று மருவியுள்ளதாகக் கூறுவர்.

சேரநாட்டு வணிகர்களும் அந்நிய நாட்டு வணிகர்களும் இங்கே குழுமியதால் குழுமூர் – கொழுமம் என்று ஆயிற்று என்றும் கூறுவர்.

பழனிக்கு மேற்கில் உள்ள குதிரையாற்றின் மேற்குக் கரையும் கொழுமம் திருத்தலத்திற்கு எல்லையாக உள்ளது.

கி.பி.1118ல் சோழ சிங்காதனத்தில் அமர்ந்து திருமுடி

புனைந்து கொண்ட வீரசோழனால், கட்டப்பட்ட திருக்கோயில் இது என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. தான் பிறந்த நாளன்று, சூரிய கிரகணம் ஏற்பட்டதால், இங்கு சிவாலயம் ஒன்றை எழுப்பி, தனது பெயர் விளங்கிட 'சோழீசுவரர்' என்றும் பெயரிட்டானாம். அவனது அதிகாரிகளில் ஒருவனான கண்ணப்பட்டன் என்பவனே ஆகமவிதிகளின்படி குடமுழுக்கும் செய்வித்ததாகவும் அதே கல்வெட்டு, ஒருபுறம் கூறுகிறது.

சோழீசுவரர் திருக்கோயில்.

'உலகுடைய பிராட்டி' யுடன் எழுந்தருளியுள்ள சோழீசுவரர் திருக்கோயில், இராஜகோபுரம் இல்லாமல் பதினெட்டடி உயர நுழைவாசல் கல்காரத்துடன் உள்ளது.

பலிபீடம், கொடிமரத்தைக் கடந்ததும் நாம் காண்பது வாத்திய மண்டபம் ஆகும். நன்கு சித்தரிக்கப்பட்ட 32 கற்தூண்களுடன் கூடிய இம்மண்டபத்தின் வடபாகத்தில் தென்திசை நோக்கியபடி அமைந்துள்ளது தாண்டவேசுவரர் மண்டபம்.நித்தம் நின்றாடுவார், அழகிய சிற்றம்பலம் உடையார் திரிபுவன சுந்தரர் என்ற சிறப்புப் பெயர்களால் வர்ணிக்கப்படும் ஆடவல்லான் சந்நிதி, ஆறடி உயரத்தில் பன்னிரெண்டு தூண்களைக் கொண்டு அமைந்துள்ளது.

தாண்டவகேசுவரர் திருமேனி

சபாநாயகர் திருஉருவமும், பிரபையும், அடிபீடமும் பொருத்துக்கள் ஏதுமின்றி, ஒரே உருவாக பஞ்சலோகத் திருமேனியாக வார்படம் செய்த சிற்பியின் கைவண்ணம்.

இத்தனை அழகிய நடராசர் திருமேனியை வார்த்துக் கொடுத்த சிற்பிக்கு, வயல் நிலங்களைப் பரிசாகக் கொடுத்த செய்தியும் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது.

ஏகதள விமானத்துடன் கூடிய கருவறையில் பெருங்கருணைப் பேரருளாளனாக சோழீசுவரர் எழுந்தருளியுள்ளார். யானை முகனும், மயில்வாகனரும், திருவாயிலின் இருபுறமும் உள்ளனர்.

சோழீசுவரர், சோழீச்சர தேவர், வீர சோழீச்சுர தேவர்,

தாண்டீசுவரர், வீதி விடங்க நாயனார், அழகிய சிற்றம்பலம் உடையார், நித்தம் நின்று ஆடுவார், திரிபுவன சுந்தரர், ஆதிநாதேசுவரர் என்றும் அழைக்கப்படுகிறார்.

பன்னிரெண்டு தூண்கள் கொண்ட சபா மண்டபம், பள்ளியறையும், கருவறையின் முன்னே உள்ளன. வெளிச்சுற்றில் சுந்தர விநாயகர், தட்சிணாமூர்த்தி சந்நிதிகளோடு, வடபுறம் சண்டிகேசுவரர், கால பைரவர் நவகிரகங்கள், சூரியதேவர், சந்நிதிகள் உள்ளன. அண்ணாமலையார் இடம் பெறும் கோஷ்டத்தில், மார்க்கண்டஈசுவரர் உள்ளார். அக்னீசுவரர் முன் மண்டபத்தோடு கூடிய தனிச்சந்நிதியாக எழுந்தருளியுள்ளார்.

பூதகணங்களின் வரிசையோடு கூடிய அந்தராளம், முகமண்டபம் ஆகியவற்றுடன், கிழக்கு நோக்கியுள்ள சந்நிதியில், பூங்கயிலை வெற்புரைமலர் பூங்கோதை, அன்னை பிரகன் நாயகி எழுந்தருளியுள்ளாள்.

'ஆதிரைத் திருநாள்' மிகச் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி






## அருள்மிகு
## கல்யாண வரதராஜப்பெருமாள் திருக்கோயில்
### கொழுமம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கல்யாண வரதராஜப்பெருமாள் |
| இறைவி | அருள்மிகு ஸ்ரீதேவி, பூதேவி |
| ஆகமம் | பஞ்சராத்ர ஆகமம் |

அருள்மிகு சோழீசுவரர் திருக்கோயிலுக்கு வடக்கில் உள்ளது கல்யாண வரதராஜப் பெருமாள் கோயில், மூன்று தள விமானங் கொண்ட கருவறையில், நீளாதேவி, பூதேவியுடன் கல்யாண வரதராஜப் பெருமாள் சேவை சாதித்தருளுகிறார். மூலவரின் முன்பு, உற்சவத் திருமேனிகளும் உள்ளன.

வரதராஜப் பெருமாளுக்கு வலது புறத்தில் நாச்சியாரம்மை தனிச்சந்நிதி கொண்டுள்ளார். அர்த்த மண்டபத்தில் ஆண்டாள் மற்றும் ஆழ்வார்கள் திருமேனிகள் இடம் பெற்றுள்ளன. இந்த இரண்டு கோயில்களும் இடம் பெற்றுள்ள இடமும் ‘கோட்டை மேடு’ என்றே அழைக்கப்பட்டு வந்ததாம். கொங்கு மண்டலத்தில் அமைந்திருந்த கோட்டைகள் முறையே கோயமுத்தூர், தாராபுரம், பவானி, அந்தியூர், கொழுமம் ஆகிய ஊர்களில் இருந்ததாக வரலாற்று ஆசிரியர் கூறுவர்.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடை பெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00மணி – பகல் 12.00 மணி

மாலை 5.00 மணி – இரவு 8.00 மணி

## சிவசக்தி பாலன் - அரிகர முருகன்

சிவ பெருமான் தனது நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு பொறிகளை வெளியிட்டபோது, அன்னை பார்வதி, சரவணப் பொய்கை தீர்த்தமாக மாறினாளாம். கார்த்திகைப் பெண்கள், ஆறு பொறிகளை ஏந்தி, சரவணப் பொய்கையில் விட்டபோது, ஆறு குழந்தைகளாக, சிவசக்தி சொரூபமாக முருகப் பெருமான் தோன்றினார் என்று கூறுவர்.

அபிஷேக பிரியரான சிவனது அம்சமாக இருக்கும் முருகன். திருச்செந்தூரில் தன் மாமனைப் போல அலங்காரப்பிரியராக காட்சி தருகிறார்.

அருணகிரிநாதர் இத்தலத்திற்கு வந்த போது முருகப்பெருமானை 'ஆடவல்லான்' வடிவில் காட்சி தரும்படி கோரினாராம். அவருக்காக நடராஜர் கோலம் கொண்டார். செந்திலாண்டவர் அங்கே அரிகர முருகனாக அருள்புரிகிறார்.



## அருள்மிகு
## காசிவிசுவநாத சுவாமி திருக்கோயில்
### கொமரலிங்கம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு காசிவிசுவநாதர் |
| இறைவி | அருள்மிகு விசாலாட்சி |
| தல விருட்சம் | நாகலிங்க மரம், வில்வ மரம் |
| ஆகமம் | காரணாகமம் |

உடுமலைப்பேட்டைக்கு தென் கிழக்கே, 16 கி.மீ. தொலைவில் அமராவதி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது கொமரலிங்கம், குமணலிங்கம் என்பதே நாளடைவில் குமரலிங்கம் ஆகிவிட்டது என்றும் கூறுவர்.

நாகலிங்க மரத்தடியில் தானே முளைத்தெழுந்த திருமேனியாக காசிவிசுவநாதர், விசாலாட்சியுடன் அருள் பாலிக்கிறார். இராஜகோபுரம் இல்லை.

'இரட்டை நந்திகள்' இடம் பெற்றுள்ளது, குமரலிங்கம்

சிவாலயத்தின் தனிச்சிறப்பாகும். பரிவார தேவதைகள் தேவ கோட்டங்களில் இடம் பெற்றுள்ளனர்.

குமரலிங்கத்தில் சிவாலயத்தைத் தவிர வேணுகோபால சுவாமி திருக்கோயிலும், அதன் அருகிலேயே வெங்கடரமண சுவாமி திருக்கோயிலும் உள்ளன.

நாள்தோறும் இரண்டு கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி

## கம்பத்திளையனார்

திருஅண்ணாமலையார் ஆலயத்தில் சிவகங்கைத் தீர்த்தத் கரையில் 16 கால் மண்டபம் உள்ளது. அதன் ஈசான்ய மூலையிலுள்ள கல்தூணில் முருகப்பெருமான் அருணகிரிநாதரின் வேண்டுகோளின்படி, அரசர் முதல் அனைத்து மக்களும் காணக் காட்சி தந்து, கல் திருமேனியாக எழுந்தருளியதாக வரலாறு. இதுவே தற்போது 'கம்பத் திளையனார்' சந்நிதி என்ற தனிக்கோயில் ஆனது.



## அருள்மிகு
## அர்ச்சுனேசுவரர் திருக்கோயில்
### கடத்தூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு அர்ச்சுனேசுவரர் |
| இறைவி | அருள்மிகு கோமதியம்மன் |
| தல விருட்சம் | வில்வம் மற்றும் வன்னி மரம் |

அமராவதி ஆறு, சிவாலயம் ஒன்றை வலம் வருவது போல பாய்வதைக் காண நாம் கடத்தூர் செல்ல வேண்டும். உடுமலைப்பேட்டைக்கு வடகிழக்கே அமராவதி ஆற்றின் மறுகரையிலே அமைந்த அழகிய கோயில்.

சோலைகளின் நடுவே, கம்பீரமான விமானத்துடன் கூடிய அழகிய கோயில் அடுத்த மாவட்டத்தின் எல்லையைத் தொடுவது போல அமைந்துள்ளது.

கிழக்கு நோக்கிய திருக்கோயில். திருக்கோயிலை வலம் வரும் அமராவதி ஆறு, கோயிலுக்கு நேர் எதிராக பாய்கிறது. ஈசான்ய மூலையில் ருத்ரபூமி உள்ளது.

கடத்தூர் திருத்தலத்தின் மகிமையை உலகோர்

அறிந்திடச் செய்த பெருமை 'காரத்தொழுவு' கிராமத்தையே சேரும். நாள்தோறும் அங்கிருந்து வெளியூர்களுக்கு பத்து குடம் பால் அனுப்பப்பட்டு வந்த நிலையில் ஒரு குடம் மட்டும், கடத்தூரைக் கடக்கும் போது தவறி கீழே விழுந்து பால் முழுவதும் சிதறியதாம். காரணமறிய அவ்விடத்தை சோதித்தபோது தானே முளைத் தெழுந்தவராக அர்ச்சுனேசுவரர் வெளிப்பட்டார்.

வெட்டுப்பட்ட தழும்பை, சிவலிங்கத்தின் முடியில் காணலாம். மருதமரம் ஒன்று கல்மரமாக மாறி சிவலிங்க வடிவில் ஆனதோ என்று கருதும் வகையில் மூலவர் திருமேனி காட்சியளிக்கிறது.

மருதமரம் வட மொழியில் 'அர்ச்சுன' என்று அழைக்கப்படுகிறது. அதனால் ஈசனும் அர்ச்சுனேசுவரர் என்றே பெயர் கொண்டுவிட்டார்.

திருமருதுடையார், ஆளுடையார் என்றும் அவருக்கு வேறு பெயர்கள் உண்டு.

'திருக்காமக்கோட்டத்து நாச்சியார்' தான் ஈசனின் வடப்புறம் இடம் கொண்டு காட்சி தரும் கோமதி அம்மன் நின்றகோலம், கருணையே வடிவான கண்களாலேயே திருவருளை வாரி வழங்கும் கோலம் அது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறுது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி





## அருள்மிகு
## கொங்குவிடங்கேசுவரர் திருக்கோயில்
### கடத்தூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கொங்கனீஸ்வரர் |
| ஆகமம் | சிவாகமம் |

கடத்தூர் ஊருக்குத் தெற்கே ஒருபுறமாக அமைந்துள்ளது கொங்கு விடங்கேசுவரர் திருக்கோயிலாகும்.

உளிபடாத திருமேனியைத் தான் விடங்கர் என்று கூறுவர், கொங்கு நாட்டின் 'விடங்கர்' இவர் எழுநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட அரிய செய்திகளைக் கொண்டது கொங்கு விடங்கேசுவரர் கோயில். கோட்டை கொத்தளத்தின் நடுவே கோயில் அமைந்திருத்தாகவும் கூறுவர்.

ஈஸ்வரன் 'ஏக நாயகராக' அருள் பாலிக்கிறார். முழுவதும் கற்றளியாலான கருவறை. வனப்பு மிக்கது. அம்மனுக்கு தனிச் சந்நிதியுமில்லை, திருமேனியும் இல்லை.

நாள்தோறும் ஒரு கால வழிபாடு நடைபெறுகிறது.



## அருள்மிகு
## சொக்கநாதர் திருக்கோயில்
### கணியூர்

அமராவதி ஆற்றின் கரையிலே, ‘க’ என்று முதல் எழுத்தைக் கொண்ட எட்டு கிராமங்கள் உள்ளன. அந்த வரிசையில் கணியூர், உடுமலைப்பேட்டைக்கு வடகிழக்கே 16 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

மீனாட்சியம்மையுடன் சொக்கநாதர் அருள்பாலிக்கும் சிவாலயம் இங்கே உள்ளது. சிறிய கோயில் ஆயினும் எடுப்பாக உயர்ந்த மேட்டில் அமைந்துள்ளது. ஊரின் எல்லையிலேயே சந்தான கோபால கிருஷ்ணன் திருக்கோயிலும் உள்ளது.

நாள்தோறும் இரண்டு கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி - பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி - இரவு 7.00 மணி.



## அருள்மிகு
## குலசேகரமுடையார் திருக்கோயில்
### சோழமாதேவி

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு குலசேகரசாமி |
| இறைவி | அருள்மிகு குங்குமவள்ளியம்மன் |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | சிவாகமம் |

உடுமலைப்பேட்டையைச் சுற்றியுள்ள 'க' என்று முதல் எழுத்தைக் கொண்ட எட்டுத்திருத்தலங்களுக்குக் இடையே, சோழ மன்னர்கள் இப்பகுதியை ஆட்சி புரிந்ததை உறுதிப்படுத்தும் வகையில், 'சோழமாதேவி' என்றே பெயர் கொண்ட திருத்தலம் உள்ளது. அமராவதி ஆற்றின் கரையிலே உடுமலைப்பேட்டைக்கு கிழக்கே, 14 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

குலசேகரர் கொலுவிருக்கும் பழமையான கற்றளி, சோழமாதேவி பழமைமாறாமல் இன்னமும் உள்ளது. 'குலசேகரமுடையார்' என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. துவாரபாலகர், ஜேஷ்டாதேவி சிலைகள் உள்ளன.

'கொங்குமார்வல்லி' என்ற அழகிய தமிழ்ப்பெயர் தற்போது 'குங்குமவல்லி' யாக மருவியுள்ளது. அருகிலேயே லட்சுமி நாராயணப் பெருமாள் ஆலயமும் உள்ளது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி - பகல் 11.00 மணி.



## அருள்மிகு
## திருமாந்தீசுவரர் திருக்கோயில்
### கண்ணாடிபுத்தூர்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு திருமாந்தீசுவரர் |
| தல விருட்சம் | வில்வ மரம் |
| ஆகமம் | சிவாகமம் |

கொத்தமங்கலகம் அன்று அழைக்கப்படும் தலம் சாக்கார் கண்ணாடிபுதூர். உடுமலைப்பேட்டையிலிருந்து 15 கி.மீ. அமராவதி ஆற்றின் கரையில் அமைந்த சிறிய கோயில்.

திருமாந்தீசுவரர், கைலாசநாதர், திருக்கோயில் களோடு, கல்யாண வரதராஜப் பெருமாள், கலியுக வரதராஜப் பெருமாள் மற்றும் அழகு நாச்சியம்மன் திருக்கோயில்களும் உள்ளன.

நாள்தோறும் இரண்டு கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி



## அருள்மிகு
## அழகு நாச்சியம்மன் திருக்கோயில்
### காரத்தொழுவு

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு அழகுநாச்சியம்மன் |
| தல விருட்சம் | வேப்பமரம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

திருப்பூர் மாவட்டம், உடுமலைப்பேட்டைக்கு வடகிழக்கே அமராவதி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. 16 கி.மீ. தொலைவில் தாராபுரம் – பழநி சாலையின் நடுவே உள்ள சிற்றூர்.

பிரதான சாலையின் இடதுபுறம், வடக்குவாயிற் செல்வியாகக் கோயில் கொண்டுள்ளாள் அழகு நாச்சியம்மன். பெரிய திருச்சுற்றுடன் கூடிய கோயிலில் 2 குதிரைகள் கம்பீரமாக மேற்கு நோக்கி நிற்கின்றன.

வரலாற்றில் நிசும்பசூதனி, மகிஷாசுரமர்த்தினி துர்க்கையம்மன் என்றெல்லாம் அழைக்கப்பட்டவள் ஆதிபராசக்தி, அவளே சாமான்யர்களின் குல தெய்வமாக மாரியம்மன், செல்லியம்மன், பத்திரகாளி, நாச்சியம்மன் என்ற வேறு பெயர்களையும் தாங்கியபடி அருள்பாலிக்கிறாள்.

எட்டு கரங்களிலும் ஆயுதங்களைத் தரித்த வண்ணம் சூலத்தால் அசுரனின் உடலைக் குத்தியபடி, தனது காலை அவன் மீது வைத்து அழுத்தியபடி, பக்தர்களை காத்திடும் பராசக்தியின் அருட்கோலமே அழகு நாச்சியம்மனின் திருக்கோலம்.

மூன்று கலசங்களுடன் கூடிய விமானத்துடன் கூடிய சிறிய கருவறையில் எழுந்தருளியுள்ளாள் அன்னை. அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியன சிறப்பாக அமைந்துள்ள வெள்ளிக் கிழமைகளில், அன்னைக்கு வெள்ளிக்கவசம் சார்த்தி சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

திருக்கோயிலின் நுழைவாசல் அருகில் பேச்சாயி என்று அழைக்கப்படும் பேச்சியம்மன் சந்நிதியும் உள்ளது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி



## அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்

### காரத்தொழுவு

காரத்தொழுவு ஊருக்குள்ளே அமைந்துள்ள மற்றொரு திருக்கோயில் அகத்தீசுவரர் திருக்கோயில், தானே முளைத்த திருமேனியாம். பெரிய கருவறை இருதள விமானத்துடன் கூடியதாக உள்ளது. தெற்குதிசை நோக்கியவாறு அமைந்துள்ளது. பெரியநாகியம்மன் சந்நிதி.

கோஷ்டத்தில் நர்த்தன கணபதி மூசிகத்தின் மீது நின்றபடி ஆடும் சிற்பம் கண்ணுக்கு விருந்து. 'பெரிய நந்தி' மண்டபத்துடன் உள்ளது. அகத்தீசுவரர் திருக்கோயிலுக்கு சற்று தொலைவிலேயே கல்யாண வரதராஜப்பெருமாள் திருக்கோயிலும் உள்ளது.

காரத்தொழுவு கிராமத்திற்கு மற்றுமோர் பெருமையும் உண்டு. அங்கிருந்து நாள்தோறும் சுற்றிலும் உள்ள கிராமங்களுக்கு பத்து குடம் பால் அனுப்பி வைக்கப்படுமாம். ஒரு குறிப்பிட்ட இடத்தைக் கடக்கும் போது மட்டும். ஒரு குடம் பால் கீழே தவறிவிழுவது, சகஜம் ஆகிவிட்டதாம். அந்த இடத்தை சோதிக்க, சுயம்புலிங்கத் திருமேனியாக அர்ச்சுனேசுவரர் வெளிப்பட்டாராம்.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 7.00 மணி - பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி - இரவு 7.00 மணி.

